உ

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி
## திருக்கோயில், பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர்!
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர்!
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர்!
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர்!

முடிக்காணிக்கை தரத் தனியிடம்!
தங்குவதற்கேற்ற வசதிகள்!
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல
இழுவை ரயில் வசதி!
பொங்கியெழும் பேரழகனைத் தாங்கிவரும் தங்கரதம்
காண வசதிகள்!

அத்தனையும் செய்து அழைக்கிறது பழனித் திருக்கோயில். தமிழ்க்கடவுளாம் கந்தப்பெருமானின் அருள்பெற்று, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் கண்காணிப்பில் கீழே கண்ட நிறுவனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. கார்த்திக்பள்ளி (ஆங்கிலப்போதனை)
6. செவிடர்பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்புஇல்லம் (அனாதை விடுதி)
10. முதியோர் இல்லம்
11. குழந்தைகள் காப்பகம்
12. மருத்துவமனை

பழனித் திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக 60 லட்சரூபாய் செலவில் மாபெரும் திருப்பணித் திட்டம் செயல்பட உள்ளது.

ஆர். அர்ச்சுனன், பி.ஏ.,
துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி




சமய பாட போதனைத் திங்களிதழ்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

| மணி 4 | திருவள்ளுவர் ஆண்டு 2006, இராக்கத ஐப்பசி, 1975 அக்டோபர் | ஓசை 4 |
|---|---|---|



## இந்த இதழில்





"அருளோசை"
சமய பாட போதனைத் திங்களிதழ்
ஆண்டுச் சந்தா ரூ. 5-00
ஓராண்டிற்குக் குறைந்த
சந்தா கிடையாது.




இரத்தினப் பேழை……

'அருளோசை' பத்திரிக்கை ஒரு விலையற்ற அரும் கருத்து இரத்தினப் பேழை… 'திருக்குறள் தேசிய நூல்' என்ற நம் தவத்திரு அடிகளாரின் அருள்மொழிக் கட்டுரையின் அமைவு ஆழ்ந்து, அமைதியாகப் பெருகும் காவிரி நீர் வெள்ளம்போல் அமைந்திருப்பது மிகவும் அருமை.

தஞ்சை என். எஸ். தாதாசாரியார்.

தெவிட்டாத விருந்து……

'தோத்திரப்பா விளக்கம்' என்ற பகுதி படிக்கப் படிக்கத் தெவிட்டாத விருந்தாக உள்ளது.

சுவாமிஜி என்ற. கனகலிங்கம்
ஏற்காடு போஸ்டாபீஸ்.

அரிய கருத்து… எளிய முறை……

அரிய கருத்துக்களை மிக எளிய முறையில் விளக்கும் அருளோசைக் கட்டுரைகளைப் படிப்பதற்கே இன்பமாக இருக்கிறது.

—ரா. சீனிவாசன் பி. காம், சேலம்.

நல்ல வழிகாட்டி……

'திருக்கோயில் வரலாறு' பகுதி எங்களைப் போன்ற வெளி மாநிலத்தவர் தமிழகம் வந்து கோயில்களைக் காண நல்ல வழிகாட்டியாய் உதவுகின்றது.

எஸ். ஏ. நாராயண் பி. எஸ்சி ஹூப்ளி

பயனுள்ள பேட்டி……

முதுபெரும் அறிஞர் வெ. சாமிநாத சர்மா அவர்கள் பேட்டி மிக நல்ல முறையில் அமைந்துள்ளது. கேள்விகளுக்கு அவர் அளித்துள்ள பதில்கள் பசுமரத்தாணிபோல் நெஞ்சில் பதிந்து, சிந்தையைத் தூண்டும் விதத்தில் அமைந்துள்ளன.

டி. எஸ். வெங்கட்ராமன், பெரம்பூர்.

திறமையான வாதம்……

குருக்கள் ஐயாவின் வாதங்களை மிகத் திறமையாக மறுத்திருக்கும் திரு சிவ. அம்பலவாணன் அவர்களின் கருத்து வரவேற்கத் தக்கதே.

ஆடல்வல்லான்-பெரியகுளம்

அருளோசை அன்பர்களுக்கு,

வணக்கம். முதற்கண் வாசக நேயர்களுக்கு அருளோசையின் சார்பாகத் தீபாவளி வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருளோசை இதழின் வளர்ச்சியில் அக்கறையும் ஆர்வமும் காட்டி வரும் அன்பர்கள் இதழின் மாற்றத்தையும், புதிய புதிய தலைப்புக்களில் அமைந்துள்ள கட்டுரைகளையும் வரவேற்று எழுதி வருகின்ற கடிதங்கள் எங்களை மேன்மேலும் உற்சாகப்படுத்தி வருகின்றது. சிறப்பாக-இதில் இடம்பெற்று-எல்லோருடைய கருத்தையும் கவனத்தையும் ஈர்த்துள்ள எழுத்துப்பட்டிமன்றப் பகுதிக்கு நல்ல வரவேற்பு இருக்கின்றது. வாசக நேயர்கள் பலர் தங்கள் கருத்துக்களைக்கட்டுரை வடிவாக்கும்போது சுருக்கமாக எழுதி அனுப்பும்படி கேட்டுக்கொள்கின்றோம். பலதரப்பட்ட கருத்துக்கள் இடம்பெறும் இப்பகுதியைச் சிறக்கச் செய்யும் கட்டுரையாளர்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கச்சியப்பரின் கந்தபுராணம் அரங்கேறிய வரலாறு சித்திரக் கதையாக அடுத்த இதழில் வெளிவருகிறது.

—பதிப்பாசிரியர்

---

ஒரு திருத்தம்

சென்ற இதழில் வெளிவந்த ஆழ்வாரின் ஆழ்ந்த விண்ணப்பம் என்ற கட்டுரையில் முன்னுரைப் பகுதியில் 109ஆம் பக்கத்தில், 29ஆம் வரியில் நான்காமவராயினும் என்பதை "ஐந்தாமவராயினும்" என்று திருத்திக்கொள்ள வேண்டுகிறோம்.

[ஆசிரியர்]




## 3. நாட்டு வெறி உண்டாக்காத இலக்கியம்

இந்த உலகம் விரிந்தது; பரந்தது. கட்புலனுக்கு வந்துள்ள உலகமே நமக்குத் தோன்றுகிறது. கட்புலனுக்கு வராத உலகமும் உண்டு. இந்த விரிந்த உலகம் உயிரினங்கள் வளர்ந்து வாழவே. இயற்கையின் மாறுபாடுகளால் உலகம் பிரிக்கப்பட்டிருக்கிறது. உலகத்தை இயற்கையில் பிரித்திருப்பது வேலியல்ல; இயற்கையின் சின்னங்களே! ஆழமான கடல்கள்! உயரமான மலைகள்! இவைகளே இன்று உலகத்தைப் பிரித்துக் காட்டும் எல்லைகள்! இவையும் நிலையான எல்லைக்கோடுகளல்ல. இன்று கடலாக இருப்பவை ஒருகாலத்தில் மலையாகவும், இன்று மலையாக இருக்குமிடங்கள் ஒரு காலத்தில் கடற்பகுதியாகவும் இருந்துள்ளன. ஊழி மாற்றங்கள் உலகத்திற்கு உருமாற்றங்கள் தந்துள்ளன. அதனல், உலகம் முழுவதும் ஒருநாடே என்ற உணர்வு தோன்ற வேண்டும்.

தகுதிவாய்ந்த மனிதர்கள் என்றும் எல்லைகளைக் கடந்தே வாழ்ந்து வந்துள்ளனர். எல்லைகள் சிறுமைத்தனமுடையன. எல்லைகளைக் கடந்து அன்பு பாராட்டுதல் உயரிய பண்பு. மனித சமுதாயத்தின் தொடக்க காலத்தில் நாடு, எல்லை நிர்ணயிப்புப் போராட்டங்கள் இருந்ததில்லை. மக்கள் சுதந்திரமாக வாழ்ந்தனர். உலகின் பரப்பளவு அதிகமாக இருந்ததாலும், இயற்கைத் தடைகள் இருந்ததாலும் உறவுகள் வளராமல் இருந்திருக்கலாம் ஆனலும் பகையில்லை. அதற்கு மாருக எனது நாடு, உனது நாடு என்று நாட்டுப் பற்றுக்களை வளர்ப்பது நன்றன்று. இந்தக் குறுகிய நாட்டுப் பற்றுக்களின் காரணமாக ஒருநாடு இன்னெரு நாட்டோடு மோதுகிறது. நாட்டுக்கும் நாட்டுக்குமிடையே சண்டைகள்! ஒரே சமயத்தைச் சார்ந்த இரண்டு நாட்டில் வாழும் மதத்தலைவர்கள் தத்தம் நாடு வெற்றி பெற வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திக்கும் வேடிக்கையை ஐரோப்பிய வரலாற்றில் பார்க்கின்ரேம். இந்திய மொழி இலக்கியங்களில்கூட மன்னர்வழி நாட்டுச் சண்டைகள் ஏராளம்! புறநானூறு, புறப்பொருள் வெண்பா மாலை முதலிய நூல்கள் இத்தகைய சண்டைகளைத்தானே வருணிக்கின்றன! உலகு தோன்றிய நாள்தொட்டு நாளதுவரை நாட்டுப் பற்றின் காரணமாகவும், ஆக்கிரமிப்புக்களின் காரணமாகவும் நடைபெற்று வந்துள்ள போர்கள் பலப்பல. மனிதசக்தியில் ஒரு கணிசமான விழுக்காடு நேற்றும் போரிலேயே கழிந்திருக்கிறது இன்றும் கழிந்து வருகிறது. போரில் செலவழிந்த-செலவழிந்து



கொண்டிருக்கிற மனித சக்தியை மனித குலத்தின் ஆக்கத்திற்குப் பயன்படுத்தி யிருந் தால் இந்த உலகைவிட்டு வறுமையை அறவே அகற்றியிருக்க முடியும். ஆனல் அந்த உயர்ந்த எண்ணம் உலகில் இன்னும் உருப்பெறவில்லே.

வாழப்பிறந்த உயிர்களேயும், வாழும் உலகத்தையும் அழிப்பது நாட்டுப்பற்ருகாது. குறுகிய எல்லேக்குட்பட்ட நாட்டின் சிறப்பை எடுத்துக்கூறி, அதில் உணர்வை வளர்த்து நாட்டுப்பற்றை உண்டாக்கிப் பிறநாட்டா ரோடு போராடத் தூண்டும் தன்மையனவாக அமைந்துள்ள இலக்கியங்கள் நாட்டு இலக் கியங்களாக-உலக இலக்கியங்களாகத் திகழும் தன்மையுடையனவாகா. திருவள்ளு வர் காலத்திற்கு முன்பும், அவர் காலத்திலும் குறுகிய நாட்டுப்பற்று வளர்ந்து மனித உலகத் தை அழித்துக்கொண்டிருந்தது. ஆனல், திருவள்ளுவர் இந்த நாட்டுப்பற்றைக் கடந்து சிந்தித்தார். அவரது சிந்தனே உலகம் தழிஇயது. திருவள்ளுவர் நாடு பற்றிய பல குறட்பாக்கள் இயற்றியுள்ளார். எந்த நாட்டைப்பற்றி? தமிழ்நாட்டைப் பற்றியல்ல; "நேமம் நாட்"டைப் பற்றியுமல்ல. திருவள்ளு வர் காட்டும் நாடு, மக்கள் வாழும் நாடு. வள்ளுவர் கூறும் நாட்டிலக்கணம்- எல்லே களின் இலக்கணமல்ல. திருவள்ளுவர் நாட்டு எல்லேகளுக்கு உட்பட்டுத் தவிக்கும் மனிதனே எல்லேகளேக் கடந்து வளர்க்க ஆசைப்பட்டார். நாடு, எந்த நாடாக இருந்தாலென்ன? ஊர் எதுவாக இருந்தால் என்ன? அந்தந்த நாட் டையும் தான் பிறந்து வளர்ந்த நாட்டைப் போலவே உறவாலும் உணர்வாலும் ஆக்கிக் கொள்ள வேண்டும். அங்ஙனம் வாழக் கற்றுக் கொள்ளுதலே கல்வி என்ருர்.

"யாதானும் நாடாமால்"

என்பது திருக்குறள். நாட்டுப்பற்று என்ற பேரில் குறுகிய எல்லேப்பற்றை உண்டாக்க வில்லே. குறுகிய நாட்டுப்பற்றை அல்லது வெறியை உண்டாக்கத்தக்க வகையில் திருவள்ளுவர் ஒரு சொல்லேக்கூடப் பெய்ய வில்லே. எந்த ஒரு மலேயையும் கடலேயும் ஆற்றையும் எடுத்துக்காட்டுக்குக்கூட அவர் பெயர் குறிப்பிட்டுச் சொல்லவில்லே. திரு வள்ளுவரின் நாடு இது அன்று; அது அன்று. மானிடசாதி வாழும் உலகமனைத்தும் அவரு டைய நாடேயாம். அப்படியானுல், படை, அரண் ஆகியனபற்றி வள்ளுவர் கூறியுள்ளாரே என்று கேட்கலாம். அவை நாட்டெல்லேயின் விரிவாக்கத்தை நோக்கமாகக் கொண்டு கூறியவை யல்ல. அவை தற்காப்பு முயற்சி குறித்தனவே. நீதி, மனிதகுலம் முழுவதுக் கும் உரிமையாகிற வரையில் நீதியை, அநீதி யிடமிருந்து காப்பாற்ற வேண்டியிருக்கிறது. காப்பாற்றும் முயற்சிக்கே "வள்ளுவர் படை."

உலக இலக்கியங்களிலேயே நாட்டு வெறியை உண்டாக்காத இலக்கியம் திருக் குறள் ஒன்றே. மார்க்ஸ் மாமுனிவரும் குறுகிய எல்லேக்கோடுகளேக் கண்டிக்கிருர். பொதுவுடைமைத் தத்துவத்தின் இலக்கே சர்வதேசீயம்தான். இந்த இழையோட்டம் பழைய இலக்கியங்கள் சிலவற்றில் இல்லாமல் இல்லே. இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டு களுக்கு முன்பு தோன்றிய புறநானூற்றுப் புலவன் கணியன் பூங்குன்றன் "யாதும் ஊரே யாவரும் கேளிர்!" என்று ஒலித்தது பாராட்டுதலுக்குரியது. ஆனல், அந்தத் தத்துவம் முழுமையடையவில்லே. சேக்கிழா ரும் கூட அற்புத நிகழ்ச்சிகளேக் குறிப்பிடும் பொழுது "உலகம் உய்ய" என்று கூறியுள் ளார். ஆயினும் தொண்டை நாட்டைச் சேக்கிழார் பாராட்டுவதைப் பார்த்தால் தொண்டை நாட்டுப்பற்றே தோன்றும். அது அவர் காலத்தின் சூழ்நிலே. ஆனல், திருக்குறள் படித்தால் நாட்டுப்பற்று வளரும். வள்ளுவர் காட்டும் நாடு எது? எல்லேகளில் சிக்கிச் சீரழியும் நிலப்பரப்புக்களே வள்ளுவர் நாடு என்று கருதவில்லே. மக்கள் வாழும் நில மனேத்தும் வள்ளுவரது நாடே. ஆதலால் குறுகிய எல்லேக்கோட்டுப் பற்றுக்களே அகற் றும் திருவள்ளுவரது திருக்குறளே தேசீய நூலாக இருப்பதற்குத் தகுதியுடையது.

(தொடரும்)




திருவளர் செல்வனுக்கு,

நல்வாழ்த்துக்கள்!

சாங்கியரின் கொள்கையில் அதாவது சாங்கியரின் மூலப்பொருள் கொள்கையில் பிரகிருதி, புருடன் இரண்டுக்கும் சமநிலை கொடுப்பது அவர்கள் நிலையிலேயே முரண்பாடு. இந்த முரண்பாடு நீங்கினுல் சாங்கியம் பௌத்தத்தின் முடிவைப்பெறும். அல்லது வேதாந்தத்தின் முடிவை ஏற்கும். அதாவது மாற்றங்களை அடையும் இயல்பினதாகிய பிரகிருதிக்கு முதன்மையிடம் கொடுத்தால் பௌத்தமாகும். அங்ஙனமின்றி மாற்றமேயடையாத புருடனுக்கு முதன்மையிடம் கொடுத்தால் வேதாந்தமாகும். இவ்விருவகைக் கொள்கைக்கும் இடையில் வேறொரு கொள்கையும் உண்டு. அக்கொள்கையைத் தத்துவ நூலறிஞர் வைசேடிகம் என்பர். சாங்கியர் கூறும் புருடனுக்கும் பிரகிருதிக்கும் இடையில் உள்ளஉறவு என்ன? தொடர்பு என்ன? உருவற்ற உயிர்க்கு உடலைத் தோற்றுவிப்பது பிரகிருதி. உடலொடு கூடிய உயிர்கள் நுகர்வதற்குரிய நுகர் பொருள்களைத் துய்ப்பிற்குரியன வற்றைப் பிரகிருதி தோற்றுவிக்கிறது. பிரகிருதியோ அறிவற்றது. அஃதொரு சடப்பொருள். அறிவற்ற சடப்பொருளாகிய பிரகிருதி, தோற்றுவிக்கும் பணியை எப்படிச் செய்கிறது? உலகிற்குப் பயன்பட வேண்டும் என்ற எண்ணம் அறிவற்ற சடப்பொருளாகிய பிரகிருதிக்கு இருத்தல் இயலாது. பிரகிருதியை விருப்பம்போல விரிவாக்கவும் ஒடுக்கவும் கூடிய இயல்பு புருடனிடமும் இல்லை. காரணம் அது செயலற்றது.

திருவளர் செல்வ, ஆக உலகை உற்பத்தி செய்வது யார்? ஒடுக்குவது யார்? என்ற வினக்கள் எழுகின்றன. இந்த விஞக்களுக்கு விடை கூறுவதில் நமது சமய நெறியாளருக்கு-சைவ சித்தாந்தக் கொள்கையினருக்கு இடர்ப்பாடு இல்லை. சைவசித்தாந்தம் கடவுள் உண்டு என்ற கொள்கை யுடையது. ஆனுல், சாங்கியரோ கடவுள் உண்மையை ஒத்துக்கொள்வதில்லை. சாங்கியர் கடவுள் உண்மையை ஒத்துக் கொள்ளத் தயங்குகின்றனர். அதற்கு ஒரே காரணம் கடவுள் உண்டு என்பதை நிரூபிக்க முடியாது என்ற கருத்தில்தான், திருவளர் செல்வ, எந்த ஒன்றையும் ஏற்றுக்கொள்ள அளவை நூல் சில நெறி முறைகளைக் கூறுகிறது. சிலவகை எடுத்துக்காட்டுகள் - பிரமாணங்களின்

மூலம்தான் உண்டு என்பதை ஏற்க இயலும். சமய நெறிகளுக்குள் ஏற்றுக் கொள்ளும் பிரமாண வகைகளுக்குள் வேறுபாடு இருக்கலாம். சாங்கியர் காண்டல், கருதுதல், உரை ஆகிய மூன்றுவகைப் பிரமாணங்களையும் ஏற்றுக் கொள்கின்றனர். ஆனாலும், கடவுள் உண்மைக்கு உரைப் பிரமாணங்களை ஏற்றுக் கொள்ளவில்லை. திருவளர் செல்வ, உலகத்துச் சிந்தனைகளில்தான் எவ்வளவு வேடிக்கை, விநோதங்கள்? சிலர் உரைகளை ஏற்றுக்கொள்வர்; உரை களால் உணர்த்தப்படும் கடவுளை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இந்து மதத்தின் ஓர் உட்பிரிவு மீமாம்சம். மீமாம் சகர்கள் நான்கு வேதங்களை ஏற்றுக் கொள்வர். ஆனால், வேதங்கள் கூறும் கடவுளை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். கடவுள் இல்லை என்போர் உலக உற் பத்திக்குக் காரணம் சொல்ல வேண்டுமே! உயிர்களின் கர்மமே உலக உற்பத் திக்குக் காரணமென்பர். ஆனால், சாங் கியர் இந்தக் கொள்கையையும் ஏற்றுக் கொள்வதில்லை.

திருவளர் செல்வ, உலகம் பிரகிருதி யில் அடங்குகிறது. பிரகிருதி சத்துவம், ராஜசம் தாமசம் ஆகிய முக்குணங் களாக நிற்கும். பிரகிருதி ஒடுங்கிய நிலையிலும் தொடர்ந்து இயங்கும். ஆனாலும் இந்த இயக்கத்தில் பொருள் களின் உற்பத்தியில்லை; தோற்றமில்லை என்பது சாங்கியர் கொள்கை. ஒடுக்கமும் தோற்றமும் சொன்னால் கடவுள் வேண்டுமே என்று கருதித்தான் சாங் கியர் இங்ஙனம் கூறுகின்றனர். அதனால் பயனுடைய கடவுளை விட்டு விட்டு பயனற்ற இயக்கத்தை ஏற்றுக் கொள் கின்றனர். பிரகிருதி தன்னுள் ஒடுங்கிய உலகத்தை உயிர்களை முன்னிட்டு, உயிர் களின் சந்நிதியில் தோற்றுவிக்கும். பிரகிருதியினின்றும் உலகம் தோன்ற உயிர்களின் முன்னிலை போதுமானது. ஆனால், உயிர்கள் எங்கும் வியாபித்திருக் கின்றன என்ற கொள்கையோடு இது முரண்படுகிறது. உயிர்களின் முன்னிலை யில் உலகம் தோன்றுகிறது என்ற கொள்கையை விளக்கச் சாங்கியர், காந்தம் இரும்பை ஈர்ப்பதை உவமை யாகக் காட்டுவர். உவமையை வினாவுடன் இணைத்து விளக்கப்புகின் - திருவளர் செல்வ, கடவுள் தேவைப்படுவார். காந்தம் இரும்பின் முன்னிலைப்படும் பொழுதுதான் ஈர்க்கிறது. நெடுந் தொல வில் கிடக்கும் இரும்பைக் காந்தம் ஈர்ப்ப தில்லை. அப்படியானால் நெடுந் தொலைவி லிருக்கிற இரும்புத் துண்டைக் காந்தத் தின் ஈர்ப்பாற்றல் எல்லைக்குக் கொண்டு வருவது யார்? அதுபோல் பிரகிருதியின் முன்னால்புருடனை முன்னிலைப்படுத்துவது யார்? என்ற வினாக்கள் தோன்றாமல் போகுமா? பிரகிருதியில் சில உள்பொருள் கள் தோன்றி விளக்கமுறுகின்றன. பிரகிருதியில் புத்தி தோன்றுகிறது. சத்துவகுண மேம்பாட்டால் புத்தி தோன்றுகிறது. இந்தப் புத்தியிலிருந்து அகங்காரம் தோன்றுகிறது. இங்ஙனம் ஒன்றன்பின் ஒன்றாக இருபத்தைந்து தத்துவங்களாகத் தோன்றி விரிந்து உலக உற்பத்தி விளக்கமுறும். இத் தத்துவங்களை முப்பத்தாறு என்பர் சைவ சித்தாந்திகள். தத்துவங்கள் தோற்றம், விரிவு ஆகியனவற்றைச் சைவசித் தாந்தம் பற்றி எழுதும்பொழுது உனக்கு எழுதுவோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

குன்றக்குடி அடிகளார்




## மெய்கண்ட தேவ நாயனர்

சைவசமய இலக்கியங்கள் தோத்திரங்கள், சாத்திரங்கள் என இருவகைப்படும். தோத்திரங்கள் இறைவனை அன்பினல் வழிபடுவதற்கு ஏற்றவை. சாத்திரங்கள் கடவுள், உயிர், உலகம் இவற்றின் உண்மையை ஆதாரங்களுடன் நிறுவிக்காட்டுபவை. தோத்திரங்களைப் பன்னிரு திருமுறைகளாக வகுத்துள்ளனர். இவற்றை அருளியவர்கள் இருபத்தேழு ஆசிரியர்கள். சாத்திரங்கள் பதினன்கு. அவற்றில் ஒன்று சிவஞான போதம். இதை இயற்றியவர் மெய்கண்ட தேவ நாயனர். அவர் வரலாற்றைக் காண்போம்.

தொண்டை நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் இடையேயுள்ள பகுதியை நடு நாடென்பர். அதில் திருப் பெண்ணுகடம் என்ற பாடல் பெற்ற சிவப்பதியில் அச்சுத களப்பாளர் என்ற வேளாளர் தலைவர் இருந்தார். அவருக்கு மகப் பேறில்லை. தன் குல குருவாகிய சகலாகம பண்டிதரிடம் குறையிரந்து வேண்டினர். அவரும் அக்கால வழக்கப்படி தேவாரத்தில் கயிறு சாத்திப் பார்த்தார். "பேயடையா பிரிவெய்தும்'' என்று தொடங்கும் திருவெண்காட்டுத் தேவாரப்பாடல் கிடைத்தது. பண்டிதர் களப்பாளரை மனைவியுடன் திருவெண்காடு சென்று முக்குள நீராடி, திருவெண்காட்டீசரை வழிபடும்படி அறிவுரை பகர்ந்தார். அவ்வாறே செய்ய களப்பாளர் மனைவியும் கருவுற்று, ஒரு நன்னளில் ஆண் மகவை ஈன்றெடுத்தார். குழந்தைக்குத் திருவெண்காட்டு இறைவன் பெயரான, சுவேத வனப் பெருமாள் என்று சூட்டினர். அது திருவெண்ணெய் நல்லூரில் அம்மான் வீட்டில் வளர்ந்தது. மூன்ருண்டு வயது. தெருவில் விளையாடிக் கொண்டிருந்தது. வான வீதி வழியே சென்ற பரஞ்சோதி முனிவர் குழந்தை பரிபக்குவத்தை யுணர்ந்து, கீழிறங்கி வந்து ஞானேபதேசம் செய்து வைத்து, மெய்கண்டார் என்ற தீட்சா நாமத்தையும் சூட்டிச் சென்ருர். அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப் பிள்ளையாரை வழிபட்டு, தத்துவப் பொருள்களின் உண்மைகளை உணர்ந்தார். அவரிடம் உபதேசம்பெற சீடர்கள் கூடினர். சிவஞான போதம் என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலை இயற்றியருளினர். ஒருசமயம் மெய்கண்டார் சீடர்களுக்கு ஆணவ மலத்தைப் பற்றி விளக்கிக் கொண்டிருக்கும்போது சகலாகம பண்டிதர் வந்தார். "ஆகமத்தின் சொருபம் யாது?" என்று மெய்கண்டாரைக் கேட்டார். மெய்கண்டாரும் பண்டிதரை ஏற இறங்கப்பார்த்து அவரைச் சுட்டு விரலால் காட்டினர். பண்டிதர் மமதை அடங்கி அவருக்குச் சீடர் ஆனர். மெய்கண்டார் அவருக்கு "அருணந்தி சிவாசாரியர்'' என்ற திருநாமத்தைச் சூட்டினர். குருவின் திருவுள்ளத்திற் கிணங்க சிவஞான போதத்திற்கு விரிவுரையாக சிவஞான சித்தியார் என்ற நூலை இயற்றினர்.

மெய்கண்டார் காலம் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதி என்பர். சிவஞான போதம் 12 சூத்திரங்களை யுடையது; 40 வரிகளில் சைவசித்தாந்தத்தை இரத்தினச் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறது. ஒரு நாட்டின் மெய்ஞ்ஞானத்தை (தத்துவத்தை) 40 வரிகளில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்த நூல் உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் இல்லை. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டது. பிற மத கண்டனம் இதில் எதுவும் இல்லை. தள்ளுவனவற்றைக் கூருது கொள்ளுவனவற்றையே கூறுகிறது. வடமொழி நூலிலிருந்து மொழிபெயர்ப்பு செய்த தன்று. "சைவ சித்தாந்தம் தமிழரின் நுண்மாண் நுழைபுலத்தின் பொதுக்கு எடுத்த விளைவு" என்ற மேல்நாட்டாரின் கூற்றுக்குத் தலைசிறந்த எடுத்துக்காட்டாக விளங்கி நிற்பது.

சிவஞான போதத்துக்குப் பாண்டிப் பெருமாள் உரை, சிவஞான முனிவரின் சிற்றுரை, பேருரை முதலியன உண்டு. ஆராய்ச்சி நூல்களும், ஆங்கில மொழி பெயர்ப்புக்களும் நிறைய இருக்கின்றன.

ஐப்பசி 17ஆம் நாள் (3-11-1975) அன்று மெய்கண்டாரின திருநட்சத்திரம் வருவதை யொட்டி இக்கட்டுரை வெளிவருகின்றது.



# நினைவுபடுத்துகிறோம்

## சந்தாவைச் செலுத்திவிட்டீர்களா?

['அருளோசை' இதழ் ஆற்றி வரும் சேவையை அன்பர்கள் நன்கு அறிவார்கள். சமயப் பணி ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்டு வெளிவரும் இதழின் சந்தாதாரர்கள் தங்கள் சந்தா முடியும்போது அடுத்த ஆண்டிற்கான சந்தாவைச் செலுத்திப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுமாய் அன்புகூர்ந்து கேட்டுக் கொள்கிறோம். சந்தா முடிந்துள்ள அன்பர்களுக்குத் தனித்தனியே நினைவூட்டுக் கடிதங்களையும் எழுதியுள்ளோம். இந்த இதழில் வாசக அன்பர்களின் வசதிக்காகச் சந்தா முடிந்த அன்பர்களின் சந்தா எண்களை மட்டும் வெளியிட்டுள்ளோம்].

**அக்டோபர் மாதத்தோடு முடிவடையும் சந்தா எண்கள்**

சென்னை
3384.

செங்கற்பட்டு மாவட்டம்
3387, 3403, 3404, 3405, 3406, 3407, 3408, 3438, 3439.

தென்ஆர்க்காடு மாவட்டம்
111, 2694, 2727, 3381, 3382, 3383.

வடஆர்க்காடு மாவட்டம்
1319, 2650, 2693, 3369, 3379, 3434, 3435, 3436.

தருமபுரி மாவட்டம்
1269, 2725, 2726, 3374, 3375, 3398, 3399, 3400.

சேலம் மாவட்டம்
2681, 3401, 3402, 3433.

கோவை மாவட்டம்
2697, 3378.

திருச்சி மாவட்டம்
3376, 3396.

தஞ்சை மாவட்டம்
2706, 2738, 2773, 2791, 2799, 2800, 3368, 3394, 3397.

இராமநாதபுரம் மாவட்டம்
3373, 3416, 3418, 3419, 3420, 3437.

மதுரை மாவட்டம்
3372, 3409, 3411, 3413, 3415, 3423, 3429, 3430, 3431.

நெல்லை மாவட்டம்
2683, 3424, 3425, 3426, 3427.

குமரி மாவட்டம்
3392, 3417.

வெளி மாநிலம்
1297, 2479.

**நவம்பர் மாதத்தோடு முடிவடையும் சந்தா எண்கள்**

சென்னை
2588, 3443, 3518.

செங்கற்பட்டு மாவட்டம்
3462, 3485.

தென்ஆர்க்காடு மாவட்டம்
3442, 3449, 3450, 3451, 3484, 3493.

வடஆர்க்காடு மாவட்டம்
1311, 3471, 3503, 3504, 3505.

தருமபுரி மாவட்டம்
3481, 3482,

சேலம் மாவட்டம்
3475, 3476, 3486, 3487, 3498, 3499, 3501.

திருச்சி மாவட்டம்
901, 3500, 3506, 3507.

தஞ்சை மாவட்டம்
1559, 1581.

இராமநாதபுரம் மாவட்டம்
3490.

நெல்லை மாவட்டம்
3473,

குமரி மாவட்டம்
3441, 3478.

மதுரை மாவட்டம்
1515, 2444, 3452, 3453, 3460, 3455, 3456, 3457, 3468, 3469, 3463, 3466, 3467, 3488, 3489, 3470, 3479, 3480, 3502. 3495, 3496, 3497, 3454,

ஓம்

# சம்பந்தக் கூத்தன்

பேராசிரியர் சபாரத்தினம், எம்.ஏ., பிஎஸ்ஸி.,
(சம்பந்த சரணலயன்)

ஒருநெறி மனம்வைத்துத் திருநெறித் தமிழ் தந்த குருபரக்கடவுள் திருஞானசம்பந்தர். ஊழிமுதல்வன் இவனென்று உணர்த்தும் ஏழிசைவித்தகர். அவர் ஞானத்தின் திருவுருவம்; நான்மறையின் தனித்துணை; கானத்தின் எழுபிறப்பு. அஞ்ஞான இருள் நீங்குமாறு ஆலவாயான் திருநீற்றைச் சோலைத்தமிழ் நாடெல்லாம் தூவியருளிய தோன்றல் அவர். பெருமான் நம்பியாண்டார் நம்பிகள் "பக்தித் தனித்தெப்பம் பார்வாழத் தந்தபிரான்" என்று அவர்தம் அவதார நோக்கத்தை ஒருவாறு குறிக்கின்றார். பக்திநெறியே முக்திநெறி. முக்திநெறி என்பதும் திருநெறி என்பதும் ஒன்றே. திருநெறித் தமிழ் என்பது தேவாரம்.

சேக்கிழார் பெருமான் 'வண்தமிழ்செய் தவம் நிரம்ப', திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற, மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல, அசைவில் செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறை வெல்ல, இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருகத்' திருஞானசம்பந்தர் அவதரித்தருளினர் என்று கூறுகிறார். இவ்வாறு இவைபோன்ற பல நலன்களும் பெருகுமாறு திருஞானசம்பந்தராக அவதரித்தருளியவர் யார்? செந்தமிழ்ச் சீர்களுக்கு நாயகனான செவ்வேள் முருகனே வேல், மயில், சேவல் இவற்றையெல்லாம் மறைத்துக் கொண்டு திருஞானசம்பந்தராக அவதரித்தருளினர்.

"கருதும் ஆறிரு தோள்மயில் வேல்இவை
கருதொணுவகை யோரரசாய்வரு
கவுணியோர்குல வேதிய னுயுமை
கனபாரக்
களப பூண்முலை யூறிய பாலுண்ணும்
மதலை யாய்மிகு பாடலின் மீறிய
கவிஞ னய்வினை யாடிடம் வாதிகள்
கழுவேறக்
குருதி யாறெழ வீதியெலாம் மலர்
நிறைவதாய்விட நீறிடவேசெய்து
கொடிய மாறன்மெய் கூன் நிமிராமுனை
குலையாவான்
குடிபுகீரென மாமதுராபுரி
இயலை ஆரண ஊரென நேர்செய்து
குடசை மாநகர் வாழ்வுற மேவிய
பெருமாளே"

(குடசை-திருக்குடவாயில். 'சுருதியாயியல்' திருப்புகழ்) என்று பெருமான் அருணகிரியார் பாடியருள்கின்றார்.

திருஞானசம்பந்தப் பெருமான் வேறு, முருகக் கடவுள் வேறு அல்லர். இருவரும் ஒருவரே. முருகன் புகழ் முழுக்குவதையே பெருந்தவப் பேருகக் கொண்டு விளங்கிய அருணகிரிப்பெருமான் கந்தரந்தாதி என்னும் நூலில் 'திருஞானசம்பந்தரைத் தவிர்த்து வேறு தெய்வங்கள் உலகில் கிடையவே கிடையாது' என்று உறுதியிட்டுச் சத்தியம் செய்து கொடுக்கின்றார் எனில் முருகப்பெருமான் வேறு, திருஞானசம்பந்தர் வேறு என்று எண்ணலாமா? அவ்வாறு பேதப்படுத்திப் பார்த்தல் பொருந்தாது. திருஞானசம்பந்தரின் பெருமை, முருகனின் பெருமை இரண்டையும் ஒன்றாக்கிச் சீகாழித் திருப்புகழில் அருணகிரிப் பெருமான் கூறுவதைக் கவனித்தால் இவ்விருவரும் ஒரு பரம்பொருளே-ஒரு குருவடிவமே-என்பது திட்டவட்டமாக விளங்கிவிடும். வள்ளிநாயகியார் மூலஞானமங்கை என்று திருப்புகழில் சிறப்பிக்கப்படுகிறார். இந்த ஞானமங்கையின் பெருமையும், ஞானமங்கையோடு சம்பந்தம் கொண்ட ஞானசம்பந்தரின் பெருமையுமே திருப்புகழ் பாட்டுக்களில் மிகுதியாக விளங்குவதை யாரும் மறுக்கமுடியாது.

திருஞானசம்பந்தரின் பெருமை முழங்கும் திருப்புகழ்ப் பாடல்கள் பல. அவற்றுள் ஒன்றின் கருத்தையே இங்கே காண இருக்கிறோம்.

"என்பந்த வினைத்தொடர் போக்கிவி
சையமாகி
இன்பந்தனையுற்று மகாப்ரியம் அதுவாகி
அன்புந்திய பொற்கிணி பாற்கடல்
அமுதான
அந்தந்தனில் இச்சை கொளாற்பதம்
அருள்வாயே
முன்புந்தி நினைத்துரு வாற்சிறு வடிவாகி
முன்திந்தி எனப்பர தாத்துடன்
நடமாடித்
தம்பந்தம் அறத்தவ நோற்பவர் குறைதீரச்
சம்பந்தன் எனத்தமிழ் தேக்கிய
பெருமானே"

வேறு கருத்து விரவாமல் திருஞானசம்பந்தரை மட்டுமே குறித்துவரும் திருப்புகழ்ப் பாடல் இது. இதன் பொருளை நோக்குவோம்: "எனது பந்தமாகிய வினைத்தொடர்களெல்லாம் போக்கியருள வேண்டும். என் நோக்கத்தில் அடியேன் வெற்றி பெறவேண்டும்; இன்பநிலையை அடைந்து, மிகுதியான விருப்பம் கொள்ளும் பேரன்பு பெருகிய நிலையில் நான் விளங்க வேண்டும். இந்த நிலையில் இருந்து கொண்டே, உமையம்மையால் தங்களுக்குத் தரப்பட்ட பொற்கிண்ணியில் உள்ளதும் பாற்கடல் அமுதத்துக்கு ஒப்பானதும் ஆன முடிவான பேரின்பப் பொருள்மீது ஆசையைக் கொள்கின்ற ஓர் ஆதார நிலையை அடியேனுக்குத் தந்தருள்க. முன்பொருசமயம் பக்தி நெறியைப் பரப்பவும் பரசமயங்களை ஒழிக்கவும் மனத்தில் எண்ணங்கொண்டு, சிறு குழந்தை வடிவமாகத் தோன்றி, இறைவன் திருமுன்பு நின்று திருப்பதிகம் அருளியபோது 'திந்தி' எனும் ஒலிநயம் தோன்ற பரத சாத்திர முறைப்படித் திருநடனமிட்டுத் தங்களது பந்தம் நீங்கத் தவநிலையில் விளங்குவோரின் குறைகளெல்லாம் நீங்கத் திருஞானசம்பந்தர் என்ற பெயருடன் விளங்கித் திருநெறித் தமிழை மிகுதியான அளவில் தேக்கி வைத்திருக்கும் பெருமானே! அடியேன் வேண்டியதைத் தந்தருள்க". (விசையம்-விசயம்; வெற்றி; ஆற்பதம்-ஆஸ்பதம்; ஆதார நிலை)

இந்தப் பாடலில் திருஞானசம்பந்தப் பெருமான் திருப்பதிக இசையைப் பொழிந்து கொண்டே கையில் திருத்தாளத்துடன் இறைவன் திருமுன்னர் நடனமாடிய அருமை நிகழ்ச்சி மிக அழகாகக் கூறப்பெறுகிறது. இந்தத் திருப்புகழைத் திரும்பத்திரும்பப் பயின்றுகொண்டே இருந்தால் திருஞான சம்பந்தப் பெருமானின் நடனக்கோலம் மனக் கண்ணில் தோன்றுவதை அனுபவத்தில் உணரலாம்.

திருஞானசம்பந்தப் பெருமான் அருந்தமிழ்த் தெய்வமாக மட்டுமின்றி ஆடற்கலைத் தெய்வமாகவும் விளங்கினர். திருப்பதிகம் பாடும் போது அவர் ஆடவும் செய்தார் என்பதைச் சேக்கிழார் பல இடங்களில் கூறுகின்றார்.

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ
போகத்தை ஒழிவின்றி உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும்
எளிவர அருளினை எனப்போற்றி
இணையில் வண்பெரும் கருணையே
ஏத்திமுன் எடுத்தசொற் பதிகத்தில்
புணரும் இன்னிசை பாடினர்;
ஆடினர்; பொழிந்தனர் விழிமாரி."

(திருஞானசம்பந்தர் புராணம்-161)

"கோடல்கோங் கம்குளிர்கூ
விளமென்னும் திருப்பதிகக் குலவுமாலை
நீடுபெரும் திருக்கூத்து நிறைந்ததிரு
வுள்ளத்து நிலைமை தோன்ற
ஆடுமா றதுவல்லான் ஐயாற்றெம்
ஐயனே என்று நின்று
பாடினர் ஆடினர் பண்பினெடும்
கண்பொழிநீர் பரந்துபாய"

(திருஞானசம்பந்தர் புராணம்-303)

இசையும் கூத்தும் ஒருங்கே நிகழ இயல்தமிழ் அளித்ததால்தான் அவர் 'முத்தமிழாகரன்' என்றும் அழைக்கப்படுகின்றார்.

"பொன்னார், சிறுபரற்கரந்த விளிகுரற்
கிண்கிணி
சேவடி புல்லிச் சில்குரல் இயற்றி
அமுதுண் செவ்வாய் அருவி தூங்கத்
தாளம் பிரியாத் தடக்கை அசைத்துச்
சிறுகூத் தியற்றிச் சிவனருள் பெற்ற
நற்றமிழ் விரகன்... ..........."

(ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்
கோவை-19)

என்று நம்பியாண்டார் நம்பிகள் திருஞான சம்பந்தப் பெருமானின் ஆடற்கோலத்தை நமக்குக் காட்டுகின்ருர். அருணகிரிப் பெருமான் வேறுபல இடங்களிலும்கூட இந்நடனக் காட்சியைப் பாடியருள்கிருர் :

"தோதீ திருதிகு தீதீ செகசெக
சோதீ நடமிடு பெருமாளே"
(மூலா நிலமதின்–திருப்புகழ்)

"தரணிபல இடமென்வன மதகரிகள்
தறிகள்பணி
சமணர்கிடு கிடென நடனம்
தண்டைகள் சிலம்புகள் கலின்கலின்
எனச்சிறிய
சரண அழகொடு புரியும்வேள்"
(சேவல் விருத்தம்–2)

அருணகிரிப் பெருமான் நடன ஞானசம்பந்த ரிடம் கொண்டிருந்த ஈடுபாடும் இணையற்ற பக்தியும் அளத்தற்கரியவை. ஞானசம்பந்த ராகவே அவருக்கும் புலனுகிய முருகப் பெரு மான் கொடுங்குன்றம், திருத்தணி, தில்லை முதலிய திருத்தலங்களில் நடன காட்சியையே கொடுத்தருளினுர் ஏன்பது கவனிக்கத் தக்கது.

இந்தக் கருத்தைத் தொடர்ந்து திருமந்திரத் தில் வரும் பாட்டொன்றைக் காண்போம் :

"உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்
செம்பொன் திருமன்றுள் சேவகக்
கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடியென் அன்பில்வைத்
தேனே"
(திருமந்திரம்–2742)

'சம்பந்தக் கூத்தன்' என்ற தொடர், ஆழ்ந்த சிந்தனைக் குரியது.

காலவரையறைப்படி நோக்கினுல் திருமூலர் 'சம்பந்தக் கூத்தன்' என்று நிச்சயமாகத் திருஞானசம்பந்தரைக் குறித்துக் கூறியிருக்க மாட்டார் என்பது தெளிவு. ஏனெனில் திருஞானசம்பந்தருக்குக் காலத்தால் மிகவும் முற்பட்டவர் திருமூலர். எனினும் வேறு வித மாகவும் எண்ணிப் பார்க்கலாம். பெருமான் திருமூலர் யோகநிலையால் நெடுங்காலம் வாழ்ந் தவர்; யோகநெறியால் முக்காலமும் நன் குணர்ந்தவர். தமக்குப் பின் தமிழ்நாட்டில் சம்பந்தக் கூத்தன் தோன்றியருள இருக்கின் ருன் என்பதை அவர் உணராமல் இருந்திருக்க முடியாது. இராமாயண நிகழ்ச்சிகள் நடை பெறுவதற்கு முன்னமேயே தவமுனிவர் வால்மீகி தம் ஞானக்கண்ணுல் அவற்றைக் கண்டு காவியம் பாடினுர் என்பதை நினைவு கூர்ந்தால் திருமூலரும் இவ்வாறு திருஞான சம்பந்தப் பெருமானைக் கருதியே கூறியிருக் கிருர் என்று எண்ணுவதில் தவருென்றும் நேராது. இக்கருத்து பொருத்தமானதே எனில் மேலே எடுத்துக்காட்டப்பட்ட பாடல் திருஞானசம்பந்தரைப் பற்றியது என்பதில் ஐயமில்லை. இக்கருத்து பொருத்தமற்றதாகத் தோன்றினுலும் இந்தப் பாடல் திருஞான சம்பந்தரைக் குறித்து வருவதாகவே புறனடை பொருளில் கொள்ளலாம். இவ்வாறு புறனடை பொருளாக்கி இந்தப் பாடலைத் திருஞான சம்பந்தரின் திருவடிகளில் அர்ப்பணிப்பதில் இழுக்கொன்றுமில்லை. விளக்கம் காண்போம்.

"ஆறு முகத்தில் அதிபதி நானென்றும்
கூறு சமயக் குருபரன் நானென்றும்
தேறினர் தெற்குத் திருவம்பலத்துளே
வேறின்றி அண்ணல் விளங்கிநின்
ருனே" (2758)

என வரும் திருமூலர் வாக்கிற்கேற்பக் கூத்தப் பெருமானும் குமரகுருபரனும் ஒருவரே. அருணகிரிப் பெருமான், கூத்தப்பெருமான் வேறு குருபரநாதன் வேறு என்று கருதாமல் ஒன்றே எனக்கொண்டு பாடுகின்ருர் :

"ஒருபொருளதாகி அருவிடையையூரும்
உமைதன்மண வாளப் பெருமாள்
காண்"

"சிவசிவ ஹரஹர தேவா நமோநம
தெரிசன பரகதி யானுய் நமோநம
திசையினும் இசையினும் வாழ்வே
நமோநம செஞ்சொல்சேரும்
திருதரு கலவி மணுளா நமோநம
திரிபுரம் எரிசெய்த கோவே நமோநம
செயசெய ஹரஹர தேவாசு ராதிபர்
தம்பிரானே"

என்றெல்லாம் அருணகிரிப்பெருமான் ஒருபரம் பொருளையே திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாகவும் மயிலென விளங்கும் வள்ளி நாயகியாரின் வேலைக்காரனுகவும் காண்கின்ருர். பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்,

"செவ்விதாய சிதம்ப ரம்பர தேசுறும்தக
ராலயம்
எவ்வம் நூறுபொன் னம்பலம்குகன்
எந்தையாடரங்கென்னலாம்''
(தகராலய ரகசியம்-6)

என்று பாடியருள்கிருர். பரம்பொருளாகிய இறைவனுக்குக் குகன் என்ற பெயரே பொருத்தமுடையது என்றுகூறி முருகப் பெருமானுக்கும் முப்புரமெரித்த கூத்தப்பெருமானுக்கும் இடையே பேதம் எள்ளளவும் இல்லை என்று அவர் கூறுகிருர்.

"சிவம் சக்திக் கன்னியமாச் சேயை
யுரைப்போர்
பவம்பற்றிப் பாசறைகொள் வார்''
(திருவலங்கல் திரட்டு-2ஆம் காண்டம்)

என்பதும் பாம்பன் சுவாமிகள் வாக்கே. (பவம்-பிறவி; பாசறை-துன்பம்)

சித்தாந்தப் பெரியோர்களின் கூற்றுகளும் சித்தர்களின் வாய்மொழிகளும் சிவபெருமானும் குகப்பெருமானும் ஒருபரம்பொருளே என்ற முடிபினைத் திட்டவட்டமாகத் தெரியப்படுத்துகின்றன. மணியையும் மணியின் ஒளியையும் பிரித்துப் பார்க்க முடியாது. சிவபெருமான் மணி எனில் செவ்வேள் முருகன் மணியின் ஒளி. 'தேஜஸ்' என்பது பேரொளியைக் குறிக்கும் சொல்லாகும். சிவபெருமானின் பேரொளியாகவே வடமொழிக் கந்தபுராணம் முருகவேளைப் புகழ்கின்றது.

"இந்த ஈசனின் பேரொளி மிகவும் அழகான குமாரவடிவம் கொண்டது. எல்லாத் தேவர்களும் இக்குமார வடிவத்தைக் கண்டு தங்களைப் புண்ணியசாலிகளாகக் கருதிக் கொண்டு வணங்கி நின்றனர்''

(கந்தபுராணம்-சம்பவகாண்டம்)

"ஆயிரம் சூரியர்க்கு ஒப்பான அந்த மகேச்வரனின் பேரொளியானது ஆறுமுகமும் பன்னிரண்டு கரங்களும் இரண்டு திருப்பாதங்களும் கொண்டு ஓர் அழகிய தோற்றத்தைத் தாங்கி ஒருநொடிப்பொழுதில் அழகிய குழந்தையாக உருக்கொண்டது. அந்தக் குழந்தை உருவம் மனோகரமானது. எல்லா உலகங்களுக்கும் மங்களம் ஆயுள் முதலியவற்றை விருத்தி செய்வது; அழகு வாய்ந்தவர்களுக்கெல்லாம் உவமையாகக் கூறும்படி அத்துணை உயர்வான அழகுடையது அக்குழந்தை வடிவம்.''

(கந்தபுராணம்-சம்பவகாண்டம்)

சிவபெருமானின் பேரொளியாகத் துலங்கும் முருகப்பெருமான், தாம் திருஞானசம்பந்தராக அவதரித்துத் திருநெறித் தமிழ் தந்தருளிய காலத்தும் தாம் சிவவொளி என்பதை மறவாமல் குறிப்பிடுகின்ருர்.

"கானலில்விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் தன்னொளி
யானமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க் குயரும்
இன்பமே''
(மூன்ரும் திருமுறை)

கருக்குடி இறைவனாகிய சற்குணலிங்கேச்வரரின் பேரொளியாகத் திருஞானசம்பந்தர் தம்மைக் கூறிக்கொள்வதை இப்பாடலில் நன்குணரலாம். திருஞானசம்பந்தர் முருகப் பெருமானே என்பதற்குத் தேவாரத்தில் நிறைய அகச்சான்றுகள் கிடைக்கின்றன. மேலே குறிப்பிடப்பட்ட பாடல் இத்தகைய அகச்சான்றுகளுள் ஒன்றே. 'தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன்' என்றும், 'பகல்போலும் பேரொளியான் பந்தன்' என்றும் வருகின்ற தெள்ளமுதத் தமிழ்த்தொடர்கள் திருஞானசம்பந்தருடைய ஒளிவடிவத்தை நம் மனக்கண் முன்னர் நன்ருகக் கொண்டுவந்து நிறுத்துகின்றன.

"தீபத்திலிருந்து மற்ரெரு தீபம் ஏற்றுவது போலத் தந்தையின் உருவமே குமரன் வடிவமாகின்றது. ஏற்றப்பட்ட தீபத்தின் பெருமையால் மூலதீபத்தின் பெருமை மேலும் சிறப்புடையதாக ஆகின்றதன்ரே.''

(கந்தபுராணம்-சம்பவகாண்டம்-36)

என்று சிவபெருமான் முருகனின் பெருமையை உமையம்மைக்கு எடுத்துக் கூறுகின்ருர். இந்த முருக தீபமே பின்னர் ஞானசம்பந்த தீபமாக உருவெடுத்தது. ஞானசம்பந்தர் ஞானமணி விளக்காக விளங்கி, விளக்க வேண்டியவற்றை விளக்கி விலக்க வேண்டியவற்றை விலக்கியருளினர்.

(தொடரும்)

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)

பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

### இடங்கழி நாயனர்

சிங்கத் துருவனைச் செற்றவன்
சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா
தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரதென்
செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்கு
வேளூர்மன் னிடங்கழியே. 65

(இ-ள்): நரசிங்க உருவங்கொண்ட திருமாலின் செருக்கைச் சரபமாய் அழித்த நடேசப்பிரானது; திருவம்பலத்து முகட்டைக் கொங்கின்கண் மாற்றுயர்ந்த பொன்னல் அலங்கரித்த; சோழகுலத்துக்கு முதலாயுள்ளவரும்; என்னுடைய செல்வம் இளம்பிறையணிந்த சடையையுடைய சிவபிரான் அடியாரதென்று பறையறைவிக்கும் எங்கள் முதல்வராயுள்ளவரும் யாரெனில்; இருக்கு வேளூரில் அவதரித்த தலைவராகிய இடங்கழி நாயனர். (எ-று) ஏ-அசை.

### செருத்துணை நாயனர்

கழிநீள் கடனஞ்ச யின்றார்க்
கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன்
றேவிமுன் மோத்தலுமே
யெழினீள் குமிழ்மலர் மூக்கரிந்
தானென் றியம்புவராற்
செழுநீர் மருகனன் னாட்டமர்
தஞ்சைச் செருத்துணையே. 66

(இ-ள்): செழுமையான நீர்வளமுடைய மருகனாட்டிலுள்ள; தஞ்சாவூரின்கண் அவதரித்த செருத்துணை நாயனரை; மிகநீண்ட பாற்கடலினுதித்த ஆலாலத்தை அமுதுசெய்த சிவபிரானுக்கு; திருப்பள்ளித் தாமத்திற்காக வைத்திருந்த வாசனை கமழும் பூவை; யாவரும் எடுத்துக் கூறும் பெருங் கீர்த்தியையுடைய கழற்சிங்க நாயனர் மனைவி; சாத்துதற்கு முன் எடுத்து மோந்தவுடன்; அழகு மிக்க குமிழம்பூவைப் போலும் அவள் மூக்கை அரிந்தவரென்று அறிஞர்கள் கூறுவர். (எ-று). ஏ இரண்டும் ஆலும் அசை.

திருப்பள்ளித்தாமம் அமைக்க வைத்த மலருள் அங்குநழுவிய மலரும் ஒன்ருதலில் அதனையும் இருந்த மலரென்ருர். அதனை மோத்தல் வைத்த மலருக்கும் பழுதுண்டாக்கலிற் குற்றமாயிற்றென்க.

### புகழ்த்துணை நாயனர்

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை
வையஞ் சிறுவிலைத்தா
யுருவலி கெட்டுண வின்றி
யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து
கலசம் விழத்தரியா
தருவரை வில்லி யருளி
னிதியது பெற்றனனே. 67

(இ-ள்): செருவிலிபுத்தூரில் அவதரித்த புகழ்த்துணை நாயனர்; அந்த நாட்டில் தானியங்களின் அளவு குறைந்த பஞ்சகாலமாய்; அதனல் உணவில்லாமல் திருமேனி (இளைத்து) வலிகுன்றி; சிவபிரானைத் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது; தன் கைசோர்ந்து அபிடேக கலசம் சிவபிரான் திருமுடியில் விழத் திருவுள்ளத்தில் அது பொருமல் வருந்தி; அரிய மேருவை வில்லாகவுடைய அச்சிவபிரான் திருவருளினல் படிக்காசுபெற்றார். (எ-று). ஏ-அசை.

கோட்புலி நாயனர்

பெற்ற முயர்ந்தோன் விரையாக்
கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு
நாட்டியத் தான்குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி
நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல
கேத்தும் பெருந்தகையே. 68

(இ-ள்): இடபத்தைக் கொடியாக எடுத்தவரது திருவிரையாக்கலி என்னும் திருவாணையைப் பிழைத்தவர்களாகிய; தமது சுற்றத்தாரை வாளால் வெட்டுந் தொழிலைப்பூண்ட; திரு நாட்டியத்தான்குடி என்னும் திருப்பதியில் அவதரித்த முதல்வரும்; நமது குற்றங்களை நீக்கியருளும் கோட்புலி என்னும் திருநாம முடையவரும் யாரெனில்; நம்பியாரூரது திரு வருளைப் பெற்ற கருணைக் கடலென்று; உலகிலுள்ளார் துதிக்கும் பெருமையுடை யோர் (எ-று). ஏ-அசை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

தகுமகட்பேசினேன் வியவே
நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலின லொற்றி
யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு
ளாலிவ் வியனுலக
நகும்வழக் கேநன்மை யாப்புணர்ந்
தானவ லூரரசே. 69

(இ-ள்) தக்கமகட் பேசி விடுத்த கணவன் இறக்க அதனல்; வைதவ்வியம் அடைந்த சங்கிலி நாச்சியாரிடத்து; தம்மிடத்துதிக்கும் மணவிருப்பால் திருவொற்றியூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானது மேலான தாமரை மலர்போலும் திருவடிகளை வணங்கி; அவர் திருவருளினல் இந்த அகன்ற நிலவுல கத்தினுள்ளார் நகுதற்குரிய ஒழுக்கத்தையே; நன்மையாகக் கொண்டு அந்நாச்சியாரைத் திருமணம் புரிந்தவர் யாரெனில்; திருநாவ லூரின்கண் அவதரித்த நம்பியாரூரர். (எ-று). ஏ-இரண்டும் அசை.

மகட்பேசலென்றது பெண் பேசலென்னும் பொருள்பட்டு நின்றது. தந்தை தாயர் கொடுப்பதற்குக் குறித்த மணமகன் இறத்தல் அம் மணமகட்கு வைதவ்விய மாதலில் நூல் போன சங்கிலியென்றும், அவளை மணத்தல் இழிவாதலில் நகும் வழக்கென்றும், அவ்விழிவும் சிவபிரான் திருவருள் வழிக்கொண்ட அவர்க்கு நன்காயிற்றென்னுங் கருத்தால் நன்மையாப் புணர்ந்தானென்றுங் கூறினர்.

பத்தராய்ப் பணிவார்கள்

அரசினை யாரூர் அமரர்
பிரானை யடிபணிந்திட்
டுரை செய்த வாய்தடு மாறி
யுரோம புளகம்வந்து
கரசர ணுதி யவயவங்
கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி னேர்பத்த
ரென்று தொகுத்தவரே. 70

(இ-ள்): இறைவராகிய திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் தேவபிரானை; வணங்கித் துதிக்கும் வாய்குழறி; மயிர்க்கூச்செறிந்து; கைகால் முதலிய அங்கங்கள் விதிர்விதிர்த்து; ஆனந்தக் கண்ணீர் சொரிகின்ற திரு மேனியையுடையவர்கள்; பத்தரென்று சொல்லப்பட்டவர். (எ-று). ஏ-அசை.

பரமனையே பாடுவார்

தொகுத்த வடமொழி தென்மொழி
யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை யவ்வகை
யாலவ்விண் டோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத்
தான்மலர்ப் பாதங்கண்மே
லுகுத்த மனத்தொடும் பாடவல்
லோரென்ப ருத்தமரே. 71

(இ-ள்): நூல்களிற் சிறப்புடைத்தென்று கூறப்பட்ட வடமொழியும் தென்மொழியும் ஆகிய இவைகளுள்; எது தன்னிடத்துள்ள தோ அதை; மேலான இயலும் இசையும் ஆகிய அக்கூறுபாட்டால்; விண்ணளவும் உயர்ந்த உச்சியையுடைய மதில்சூழ்ந்த சிதம்பர சபாநாதரது சிறந்த தாமரை மலர் போலும் திருவடிகளின்மேல்; செலுத்திய மனதுடன் பாட வல்லவரை உத்தமரென்று அறிஞர்கள் கூறுவர். (எ-று). ஏ-அசை.

(தொடரும்)

உ

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 8 (தொடர்ச்சி)

இடம் : பரமதத்தன் வீடு

நேரம் : பகற்போது

உறுப்பினர் : புனிதவதி, பரமதத்தன்

புனித : அன்பரே! நீரே தின்னும்.

பரம : அட, தின்னத் தின்ன சுவை கூடுதே. ஆமாம்...என்ன இது? முதலிலே தின்ற பழத்தைவிட இது சுவை அதிகமாக இருக்கிறதே. உம்.?....வேறுபாடு இருக்கிறதே. அந்தப் பழம் இவ்வளவு சுவை கொண்டிருக்கவில்லையே. புனிதவதி! இது என்ன புதுமை? ஒரு மரத்தில் பழுத்த பழங்கள் ஒன்றற் கொன்று வேறுபடுமா? நிச்சயமாக அந்தப் பழமும் இந்தப் பழமும் ஒரு மரத்துப் பழமன்று. புனிதவதி! நிச்சயமாகச் சொல்லு! நான் கொடுத்தனுப்பிய பழங்களில் இதுவும் ஒன்று? இல்லை. இருக்க முடியாது. தேவாமிழ்தத்தை ஒத்திருக்கும் சுவை மிகுந்த பழம் இது. உண்மையிலேயே இந்தப் பழம் மண்ணுலகத்தில் விளைந்தது அன்று. அமிழ்தத்தினும் ஆற்ற சுவை படைத்த இந்தப் பழம் நான் கொடுத்தனுப்பியதா? சொல் புனிதவதி! ஏன், விழிக்கிறே! ஆ...ஏன் கலங்குகிறே?

புனித : இல்லை, அன்பரே இல்லை.

பரம : அப்ப உண்மையைச் சொல். அந்தப் பழம் எங்கே? இந்தப் பழம் ஏது? என்ன நடந்தது? புனிதவதி! உண்மையைச் சொல், இல்லை...

புனித : சொல்கிறேனுங்க...வந்து, வந்து...

பரம : என்ன வந்து...சொல் சீக்கிரம்.

புனித : வந்து...ஒரு சிவனடியார் பசியிலே வந்தார். அவர் நிரம்ப பசிக்கிறது என்றாரே என்பதால் கறி சமைக்காமலேயே சீக்கிரமாக அந்தப் பழத்தை அரிந்து வைத்துச் சாப்பிடச் சொல்லி விட்டேன்.

பரம : சிவனடியார்க்குக் கொடுத்து விட்டாயா? சரி...சிவனடியார்க்குத்தான் கொடுத்தாய். ஏன் அதை இவ்வளவு நேரம் என்னிடம் சொல்லாமல் மறைத்தாய்? ஏன் மறைத்தாய்? மறைத்தது தான் இருக்கட்டும். இந்தப் பழம் ஏது? யார் கொடுத்தார்? யார் கொடுத்தது என்கிறேன். சொல்லு உம்...ஏன் நிற்கிறே?

புனித : (கதிகலங்கி அழுது புலம்பி) இது...இது...

பரம : உம்...சொல்லு....

புனித : இந்தப் பழம்...தெய்வச் செயலால் கிடைத்தது.

பரம : தெய்வச் செயலா?

புனித : ஆமாம். தெய்வச் செயலால் கிடைத்தது. சிவனடியார்க்குக் கொடுத்ததை உங்களிடம் சொல்லாமல் விட்டுட்டோமே. இனிமேல் சொன்னால் நீங்கள் என்ன நினைப்பீர்களோ என்று மயங்கி சிவபெருமானை நினைத்தேன் அவனருளால் உடனே என் கையில் இந்தப் பழம் வந்து விழுந்தது.

பரம என்னது? இந்தப் பழம் உன் கையில் வந்து விழுந்ததா? புனிதவதி என்ன இந்த மாதிரி நடிக்கிறே? உண்மையைச் சொல்லாமல் என்னை மயக்குகிறே... சொல்லு...

புனித : ஆமாங்க...உண்மை தானுங்க. நான் சொன்னது அத்தனையும் உண்மை தானுங்க நம்புங்க.

பரம : உண்மையா...கடவுளா உன் கையிலே மாம்பழத்தைப் போட்டார். நம்ப முடியலியே. புனிதவதி! நீ என்னோடு விளையாடுகிறே. நீ ஏதோ தப்பு பண்ணிவிட்டு அதை மறைக்க இப்படியெல்லாம் பேசுகிறே. உண்மையைச் சொல்கிறாயா இல்லையா?

புனித : ஐயையோ (காதைப் பொத்தி) ஆண்டவனே!...அன்பரே! நான் ஒன்றும் தப்பு பண்ணலீங்க. நான் சொன்னது அத்தனையும் உண்மை தானுங்க. கடவுள் அருளால் தானுங்க இந்த மாம்பழம் கிடைத்தது.

பரம : அப்படியா?

புனித : ஆமாங்க.

பரம : அப்படின்னா...இது மாதிரி இன்னொரு மாம்பழம் வரவழை, பார்ப்போம்!

புனித : ஆ...

பரம : ஏன் பயமா இருக்கிறதா? வரவழை இன்னொரு மாம்பழம். இல்லே, உன் மேலே எனக்கு...

புனித : ஐயையோ...ஐயனே! ஐயனே (ஓடுகிறாள், அங்கும் இங்கும்; பின்பு நின்று அழுது) அருள் வேந்தனே! மருள் நீக்கும் மன்னவா! முன் என் குறை போக்கிய முன்னவனே! இந்நிலையைக் கவனியாயோ? நான் என் செய்வேன்? என் கணவர் என்மீது ஐயம் கொள்ளவா நீ விடுகிறாய்? உலகத்துயிர்களை உய்விக்கும் உத்தமனே! உன்னருளால் என் துன்பம் களையாயோ! ஆலம் உண்ட அரனே! அடியார் துயர் போக்கும் ஆருயிர்ப் பெருமானே! என்னைச் சோதிக்கிறாயோ? பெண்ணைச் சோதித்துப் பெறுவது உனக்கு என்ன? ஆண்டவனே! அருள்வாயே எனக்கு மீண்டும் ஒரு கனி! கனிவு தரும் கடவுளே! எனக்கொரு கனி தாராயோ?

(அவள் கையில் ஒரு மாம்பழம் விழுகிறது)

ஆகா...தெய்வமே...உனது அருளே அருள்! மற்றொரு பழமும் தந்து விட்டாய். (பழத்தைப் பரமதத்தன் கையில் வைக்கிறாள்)

பரம : ஆ...இன்னொரு பழமா? உண்மையிலேயே இது இன்னொரு பழமா? புனிதவதி! புனிதவதி! (உடனே அப்பழம் அவன் கையினின்று மறைகிறது) ஆ...பழம் மறைந்தது. புனிதவதி! உண்மைதான்.. உண்மைதான். நீ சொன்னது உண்மைதான். இறைவனே இச்செயல் புரிந்துள்ளான். உன் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவனே உனக்கு இப்பழத்தை அளித்துள்ளான். இறைவன் உண்மையடியார்க்கு இறங்கி வருகிறான். புனிதவதி! கடவுளிடமே கனி பெறும் காரிகை நீ...ஆ...புனிதவதி! ஆண்டவனையே அறைகூவி அழைக்கும் ஆற்றல் பொருந்திய புனிதவதி! நீ....ஆண்டவன் அடியார். புனிதவதி!...ஆ...என் வாயால் உன் பெயரைச் சொல்கிறனே. சே, சே... (வெட்கித் தலைகுனிந்து, விரைந்து வெளியேறுகிறான்).

புனித : என்னங்க, என்னங்க! அன்பரே! அன்பரே!! ஐயோ...(குழம்பி ஓடுகிறாள்).

(தொடரும்)

# நம்மாழ்வாரின் வேண்டுகோள்

(கி. பட்சிராஜன் பி.ஏ., பி.எல்., அட்வகேட்)

திருமாலால் 'மயர்வற மதிநலம்' அருளப் பெற்றவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் தலைசிறந்தவர் நம்மாழ்வார். திருக்குரு கூரில் (ஆழ்வார் திருநகரியில்) அவதரித்த இவ்வாழ்வாருக்குக் கருவிலே அருளினன் இறைவன். எனவே மண்ணிடைப் பிறந்த இவர் "நாட்டாரோடியல் வொழிந்து நாரணனை நண்ணியே" வாழ்ந்தார். குருகூர் ஆதிநாதன் சன்னிதிக்கு இவர் பெற்றோர் இவரை எடுத்துச் செல்ல அங்கிருந்த புளிய மரத்தடியில் தவழ்ந்து சென்றவர் அம்மரத் தடியிலேயே பிறர் பெயர்த்தெடுக்க இயலாத படி யோகத்தில் அமர்ந்தார் என்பது வரலாறு.

இவ்வுலக மக்கள் திருமால் பெருமையறியாது அல்லல் படுவதை உணர்ந்த இவரது உள்ளம் பதைத்தது. அவ்வான்மாக்கள் வீணே அழியா மலிருக்க வேண்டுமே என்று பரிகிறார். இத்தகைய பரிவு முதிர்ந்திருந்த காரணத் தாலேயே இறைவன் திருவடிகளில் தனது ஆன்ம ஸமர்ப்பணமாக விண்ணப்பிக்கத் தொடங்கியவர் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை.........அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்று நாட்டா ரனைவருக்குமாக வேண்டுகிறார்.

இவரது ஞான பரிபக்குவத்தை இறைவன் படிப்படியாக நோக்கி வந்தான். ஆன்மாக் களைப் படைத்து உலவவிட்ட பரமன் அவ்வான்மாக்களில் எவையாவது அவன் கொடுத்த மறை அறிவைப் பின்பற்றி அவனை மீண்டும் அடைய முயல்கின்றனவா என்று தேடி அலைகிறான். அப்படி ஒரு ஆன்மா பக்குவமானால் அதனை ஒரு பேறாகக் கருது கிறான். "சேதன லாபம் ஈச்வரனுக்குப் பேறு" என்பது வைணவரின் அடிப்படைக் கொள்கை. இப்படி இறைவன் அலைகிறான் என்றதை அடிப்படையாகக் கொண்டே தாம்ஸன் என்ற ஆங்கிலக் கவியின் "The Hound of Heaven" (விண்ணுலக வேட்டை நாய்) என்ற கவிதை உருவாயிற்று.

தனது விண்ணப்பத்தை இங்ஙனம் அனைவருக்குமாகத் தொடங்கிய ஆழ்வார் இறைவன் திருவடிகளில் ஸமர்ப்பித்த பிரபந்தங்கள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி என நான்கு. இவற்றில் அடங்கிய பாசுரங்கள் 1296. இவற்றுள் பல அவனை நோக்கி அலமந்து கூவி அவனோடு அளவளாவும் பாணியில் அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்றைக் காண்போம்.

"எங்கள் கண் முகப்பே உலகர்கள் எல்லாம்
இணையடி தொழு தெழு(ந்) திறைஞ்சித்
தங்கள் அன்பாரத் தமது சொல் வலத்தால்
தலைத்தலைச் சிறந்து பூசிப்பத்
திங்கள்சேர் மாடத் திருப்புளிங்குடியாய்
திருவைகுந்தத் துள்ளாய் தேவா
இங்கண்மா ஞாலத் திதனுளும் ஒருநாள்
இருந்திடாய் வீற்றிடங் கொண்டே."

"மதி தொடும் மாடங்கள் நிறைந்த திருப் புளிங்குடியில் அர்ச்சாமூர்த்தியாய் எழுந்தருளி யிருப்பனே! ஏ வைகுண்ட பதியே! தேவனே! பரமபதத்தில் ஏழுலகும் செல்லும் செங்கோல் ஏந்தி வீற்றிருக்கும் திருக்கோலத்தோடு எங்கள் கண் முன்பே எவ்வுலகத்தாரும் உமது திருவடிகளில் தொழுது எழுந்து வணங்கித் தத்தம் நிறைந்த அன்போடு தாமறிந்த மொழியில் சிறந்த சொற்களால் அவரவர் சிறப் பெனக் கொண்டபடி உம்மைப் பூசிக்குமாறு இவ்வுலகத்தே ஒரு நாளாவது ஸேவை சாதிக்கக் கூடாதா?" என்பது பாசுரத்தின் பருப்பொருள்.

திருக்குருகூருக்குச் சுமார் 8 கிலோ மீட்டர் தொலைவில் பொருநையாற்றின் வடகரையில் உள்ளது திருப்புளிங்குடி என்னும் திப்பியத் தலம். அங்கே பாம்பு பண மகுடம் விரித் தமைத்த விதானத்தின் கீழே பாம்பே

சுருண்டமைந்த திருவணையின்மீதே சயனத் திருக்கோலத்தில் பரமபத நாதன் அர்ச்சா மூர்த்தமாக (விக்கிரக வடிவமாக)ப் பள்ளி கொண்டெழுந்தருளியிருக்கிருன். நம் போல் வார் கண்களுக்குத்தான் அர்ச்சாமூர்த்தியே தவிர ஆழ்வார் திருக்கண்களுக்கு அவரது திவ்ய மங்களத் திருவுருவம் என்றும் எப்போதும் காணக் கிடைப்பதே. அவரை விளித்துத் தம் உள்ளக் கிடக்கைகளை ஆழ்வார் முக முகமாக வெளியிடுவதும் இறைவன் அவரோடு அளவளாவுவதும் அடிக்கடி நிகழும் நிகழ்ச்சிகள். அப்படி ஆழ்வாரும் பரமனும் தம்முள் அளவளாவுவதலெ உள்ளடக்கிய பாசுரங்களில் ஒன்ருகும் இது. இனி அவர் களுக்குள் நிகழ்ந்த உரையாடலெ நோக்கு வோம்.

"திருப்புளிங்குடியில் எழுந்தருளியுள்ள ஏ! பரமபத நாதனே! தேவா!" என விளித்தார் ஆழ்வார்.

பள்ளிகொண்டிருந்த பரமன் தன தடங் கோள் தாமரைக் கண் மலர்ந்து ஆழ்வாரைக் குளிர நோக்கி "ஆழ்வீர் ! என்ன விஷயம்" என வினவினர்.

ஆழ் : ஒரு சிறு வேண்டுகோள் ஸ்வாமீ !

பர : என்ன வேண்டுகோளோ ?

ஆழ் : தேவரீர் விண்ணுட்டில் ஸேவை சாதிப்பதுபோல் இங்கும் சாதிக்க வேண்டும்.

பர : அது தான் நீர் ஸேவிக்கிறீரே

ஆழ் : அர்ச்சாமூர்த்தமாக வல்லவா எழுந் தருளியுள்ளீர். அது போதாது

பர : பின்னே ?

ஆழ் : தேவரீரது திவ்ய மங்கள வடிவிலே தோன்ற வேண்டும்.

பர : ஆகட்டும். உமக்கு அப்படியே தோன்றுகிறேன்.

ஆழ் : அது காளுது ஸ்வாமீ !

பர : பின். என் செய்ய வேண்டும் என்கிறீர்?

ஆழ் : அடியேன் மட்டும் அப்பேறு பெற்ருல் போதுமா? என் போன்று என் பந்துக் கள் மற்றையோரும் ஸேவிக்க வேண்டும்.

பர : சரி. குருகூரிலுள்ளார் அனைவரையும் அழைத்து வாரும்.

ஆழ் : அது மட்டும் போதுமா ?

பர : என்ன ஆழ்வாரே !

ஆழ் : ஸ்வாமீ ! இங்கு குருகூரில் என்னைச் சுற்றியுள்ளவர்கள் மட்டுமா என் பந்துக்கள்.

பர : பின்னே !

ஆழ் : எம்பெருமானே ! தேவரீர் குடல் துடக்கில் அடியேனுடன் கிடந்து தேவரீர் வெளிநாடு காண உமிழ்ந்த அனைவருமே அடியேனுடைய ஆன்ம பந்துக்களல்லவா !

பர : ஆ !... இவ்வுலகத்தார் அனைவருமா ?

ஆழ் : இவ்வுலகத்தார் மட்டுமல்ல ஸ்வாமீ ! தேவரீர் படைத்த எல்லா உலகங்களிலு முள்ளவர்களும் உமது திருவயிற்றில் அடியேனோடு, இவ்வுலகத்தாரோடு கிடந்தவர்கள் தானே ?

பர ; ஏ ! அப்பா ! ஆழ்வாரே ! அப்படியானுல் எனது லீலா விபூதியிலுள்ளார் அனைவரும் காணவா ?

ஆழ் : ஆம் ஸ்வாமீ !

பர : ......சரி! எப்படி ஸேவை ஸாதிக்க வேணுமோ ?

ஆழ் : அவர்கள் அனைவரும் தேவரீர் திருவடித் தாமரைகளில் விழுந்து ஆனந்த பாஷ்பம் பெருக்கி வணங்கி வழிபட வாய்ப்பாக ஸேவை தர வேண்டும்.

பர : அப்படித்தான் ஸேவை தந்து கொண்டி ருக்கிருேமே! ஆழ்வாரே ! அனைவரும் ஸேவிக்கிருர்கள்...ஒருமுறையில் வழி பாடும் நடந்து வருகிறதே.

ஆழ் : இது போதாது ஸ்வாமீ !

பர : இன்னும் என்ன வேண்டும் ஆழ்வாரே ! விளக்கமாகக் கூறும்.

ஆழ் : ஸ்வாமீ! தேவரீர் படைத்த உலகர் கள் எல்லாம் ஒருமொழியா பேசுகின்ற னர். ஒரு முறையிலே வழிபாடு நடக் கிறது. ஆனல் இங்கு நடையாடும் மொழியிலும் வழிபாடு நடந்தால் தாங் களும் கலந்து தேவரீரை விளித்துப் போற்ற வியலும் என்று அவர்கள் எண்ணுதல் தவறல்லவே. அப்பத் அவர்கள் பூசித்தால் அவர்களோடி

தேவரீர் உதாசீனம் செய்து விடக் கூடாதே என்று அவர்கள் அஞ்சலா மல்லவா !

பர : நாம் எதையேனும் வேண்டாம் என்ருேமா ஆழ்வாரே. என்ன செய்ய வேண்டும் என்கிறீர் ?

ஆழ் : தேவரீர் திவ்விய திருமேனியோடு ஸேவை சாதிக்க வேணும். உலகிலுள் ளார் அனைவரும் வணங்கி வழிபட வாய்ப்பருள வேணும். அவரவர்கள் தேவரீர் அவர்களுக்கென்று விதித்த மொழியில் அவர்கள் அறிவுக்கு எட்டிய வகையில் தேவரீர் திருவடிகளில் அருச்சித்துப் பூசிக்கத் தேவரீர் திருவுள்ளம் பாங்காக அமைய வேண்டும்.

பர : அப்போது இப்போதுள்ள வடமொழி முறை...

ஆழ் : அதுவும் இருக்கட்டும். அது பயின்ருர் அம்முறையில் வணங்கட்டும். அதற் காக மற்றவர் தேவரீரை அவர்கள் மொழிவழி பூசிக்க வாய்ப்பளிக்கக் கூடாதென்பதுண்டா ?

பர : ஒவ்வொருவரும் ஒவ்வொரு மொழி யிலா ?

ஆழ் ; ஸ்வாமீ ! அடியேனை இப்படி பரீக்ஷிக்க வேண்டுமா ? தேவரீரது கேள்வி உமது சர்வஞ்ஞத்துக்கு (அனைத்தும் அறிவாற்றலுக்கு) விடுக்கும் கேள்வி யல்லவா ?

பர : (புன்முறுவலுடன்) ஏது ? ஏது ! ஆழ்வாரே நம்மையும் மடக்குறீர் போலிருக்கிறதே...ம்.ம்...சரி.

ஆழ் : பரமனே ! அடியேனது அபசாரத்தைப் பொறுத்தருள வேண்டும். இவ்வுலகத் தார் படும் துன்பத்தைக் கண்டு கலங்கி அவர்களும் கடைத்தேற வேண்டும் என்ற அவாவில் எதேதோ சொல்லி விட்டேன். 'நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளவேணும்' ஞால நாதனே !

பர : (தனக்குள்) ஞால நாதனே......) ஆழ்வாரே ! உமது பரந்த கருணை நிறைந்த ஆன்ம குணத்தை மெச்சி னேம். நீர் அஞ்ச வேண்டியதில்லை. நீர் கூறியவை அனைத்தையும் நற்ற மாகவே திருவுளங் . கொண்டோம். கவலைப்படாதேயும்.

ஆழ் : இன்னும் ஒரு சிறு பிரார்த்தனை ஸ்வாமீ

பர : வேண்டுகோள் இன்னும் முற்றுப் பெற வில்லையா (வாய் திறந்து சிரிக்கிருர்)

ஆழ் : ஸ்வாமீ ! தேவரீர் இங்கு சயனத் திருக் கோலத்திலே எழுந்தருளியுள்ளீர். ஆன்மாக்கள் தேவரீரை விண்ணுலகில் அடையும்போது அங்கே "ஏழுலகும் தனிக்கோல் செல்ல" வீற்றிருந்த நிலையில் அல்லவா தோன்றுகிறீர். அப்படியே இங்கும் வேண்டும் ஸ்வாமீ!

பர : மெல்ல மெல்ல என்னவெல்லாமோ சொல்கிறீரே ஆழ்வாரே !

ஆழ் : ஸ்வாமீ அர்ச்சாரூபமாக இருந்தால் இவ்வுலக ஸேவை. தேவரீர் திவ்ய மங்கள விக்கிரக வடிவில் விண்ணுலக ஸேவையல்லவா அடியேன் வேண்டி னேன். அது வீற்றிருந்த கோலமாகத் தானே வேண்டும்.

பர : ஏது ஏது நம்மைக் கட்டியடிக்க எண்ணி விட்டீர் போலும்.

ஆழ் : யாருக்குத்தான் யசோதையின் பேறு கசக்கும் ஸ்வாமீ ! பாக்கியம் தான் வேண்டும்.

பர : சரி. அதிருக்கட்டும், நாம் வீற்றிருந்து செங்கோல் செலுத்துவது விண்ணுல கத்திருந்து தானே !

ஆழ் : அப்படியாயின் இவ்வுலகுகள் தேவ ரீரது ராஜ்யங்களன்ரு. இங்குள் ளாருக்குத் தேவரீர் குடிமக்கள் என்ற நிலையில் தேவரீர் செங்கோல் பற்றி வீற்றிருக்கும் கோலத்தை ஸேவிக்க உரிமையில்லையா ?

பர: உண்டு, ஆழ்வாரே உண்டு. உரிய காலத்தே உமது விருப்பத்தை நிறைவேற்றுவோம்.

ஆழ்: உரிய காலம் என்றுண்டா ஸ்வாமீ!

பர: அங்குள்ள நிலையிலேயே பலவிடங்களில் அர்ச்சையில் ஸேவை ஸாதிக்கின்றேமே. உம்மைப் போல் பரிபக்குவமடையும் போதல்லவா நம் திவ்ய திருமேனி ஸேவைக்கு உரியராவர்கள்.

ஆழ்: அதுவரை அர்ச்சையில் அவ்விதம் அவர்கள் பூசிக்கலாமல்லவா?

பர: யார் கூடாதென்கிறுர்கள்? அப்படிச் சொல்பவர் நம் திருவுள்ளப்பாங்கறியாதவர்களே.

மேற்கண்ட முறையிலே ஆழ்வார்க்கும் பரமனுக்கும் ஒரு உரையாடல் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கொள்வது மிகையாகாது. ஆழ்வார் பாசுரத்தின் பதங்களில் உள்ள வியங்கிய (இறைச்சி)ப் பொருளை ஊன்றி நோக்கின் இது விளங்கும்.

தமிழ் மறையால் இறைவனை வணங்கல் பயனற்றது; வடமொழியே வேண்டும் என்று பிடிவாதம் செய்வார் என்றும் இருந்திருக்கிறுர்கள். தமிழ்நாட்டிலே பிறந்து தமிழைத் தாய்மொழியாகக் கொண்டுள்ள சிலருமே இப்பிடிவாதம் பிடிப்பது விந்தையே. இப்படித் தாய்மொழி பயனற்றது என்ற தப்பெண்ணம் கொண்டவர்கள் ஆழ்வாரின் மேற்கண்ட பாசுரத்துக்கு உரையிட்ட நம்பிள்ளை காலத்திலேயும் இருந்தார்கள் என்பதை (கி. பி. 13ம் நூற்ருண்டு) இப்பாசுர வியாக்கியானத்திலும் அதன் அரும்பதத்திலும் குறிக்கப்பெற்ற இதிகாசம் (நிகழ்ச்சி) நமக்கு நன்கு விளக்கும்.

திருவரங்கத்தே உற்சவத்தில் கண்ணன் எழுந்தருளினர். மக்கள் இனம் இனமாக நின்று ஸேவித்தனர். வங்கிபுரத்து நம்பி என்ற ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் இடையர் இடைச்சியர் நின்ற பக்கல் போய்ப் பெருமாளை ஸேவித்துத் திரும்பினர். அப்போது ஆண்டான் என்ற ஸ்ரீவைஷ்ணவர் அவரை நோக்கிப் "பெருமாள் பக்கல் இல்லாமல் எங்கு போயிருந்தீர் காணும்?" என்று வினவினர். நம்பி "நான் இடையரோடு நின்று ஸேவித்தேன்" என்ருர். ஆண்டான் "நம்மவர் திரளை விட்டு அங்கு செல்வானேன்" எனக் கேட்க, நம்பி "நாம் எல்லாம் படித்தவர்கள் என்று சொல்லிக் கொள்வதனுலே பெருமாளைக் கிட்டுவதிலும் தந்திரமாயிருப்போம். அவர்கள் நம்மைப் போல் படியாத சுத்த மனத்தராதலாலே பெருமாள் கடாக்ஷம் அவர்கள் பக்கல் பள்ளமடையாயிருக்குமென்று போனேன்?" என்ருர். "சரி அவர்கள் பெருமாளை சேவித்து என்ன சொன்னுர்கள்? நீர் என்ன விண்ணப்பித்தீர்" என்று கேட்டார் ஆண்டான். நம்பி அவர்கள் 'பாலுண்பீர். பழமுண்பீர்! பொன்னலே பூணூலிடுவீர் நூறு பிராயம் புகுவீர்! நல்ல உத்தரீயம் அணிவீர்' என்றெல்லாம் தம்மை மறந்து கூவினர்கள். அடியேன் 'விஜயஸ்வ! விஜயீபவ! என்று விண்ணப்பித்தேன்' என்று பதிலிறுக்க ஆண்டான் "அங்கு போயும் முரட்டு சம்ஸ்க்ருதத்தை விட்டிரில்லையே!" என்ருராம்.

இவ்வரலாறு எத்தகைப் பொருள் பொதிந்தது! பரமனது செங்கோல் விண்ணுலகில் மட்டும் செல்வது போன்று கொண்டு,

"விண்ணுள எந்தாய்! தூய்தாய்
விளங்குக உமது நாமம்
அண்ணல்! நின் பரம ராஜ்யம்
அவனியில் வருக விண்போல்
பண்ணவ நுந்தமராணை
பாரினும் செல்க!"

எனத் துதிக்குமாறு பிரசங்கம் செய்தார் இயேசு பகவான். ஆனல் வைணவம் பரமன் வைகுண்டத்திலே எழுந்தருளியிருந்தாலும் அங்கு வீற்றிருந்தே ஏழுலகும் தனிக்கோல் செலுத்துகிருன். எல்லா உலகுகளுமே அவன் ஆணை செல்லிடங்கள்தாம் எனக்கொண்டது. அவ்வடிப்படையிலே அந்தத் திரிபுவன சக்ரவர்த்தியிடம் அவன் குடியில் ஒருவராகவே நின்று அவனேடு அளவளாவுகிருர் ஆழ்வார்.

---

பத்திமை வாழ்க்கை

பத்திமைகொண்ட வாழ்க்கை தூயது. இனிமை நலம் மிக்கது. சழக்குகளைக் கடந்தது; வழக்குகளைவென்றது; மகவெனப் பல்லுயிரும் ஒக்கப் பார்க்கும் தண்ணளியுடையது. உண்மையான பத்திமை, வாழ்க்கையில் விளங்கினல் சிக்கல்கள் இல்லை; பகையில்லை; போரில்லை; சட்டங்களின் தொகுதி இல்லை.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 7

இடம் : பெரியாழ்வார் வீடு

நேரம் : காலைப் போது

உறுப்பினர் : கோதை, பெரியாழ்வார்

கோதை : நிறையப் பூப்பறித்து வந்திருக்கிறேன் அப்பா! இன்னைக்கு மாலை அழகாயிருக்கும்.

பெரியாழ்வார்: அப்படியா அம்மா! கட்டு அம்மா!

கோதை : இன்னைக்கு கண்ணனைப் பற்றி இன்னும் சொல்லுங்கப்பா. கண்ணனைப் பற்றின்னு கேட்டுக் கொண்டே இருப்பேன.

பெரியாழ்வார்: சொல்கிறேன் கோதை! கங்கைக் கரையில் கன்னிப் பெண்களுடன் கரையிலாத விளையாட்டுக்களை விளையாடினான். ஆயர்களுடன் ஆநிரைகள் மேய்த்தான். புல்லாங் குழல் எடுத்து ஊதினான். கண்ணன் குழலிசையில் மயங்காதார் யாரே! ஆநிரையெல்லாம் அவன் குழலிசைக்கு மயங்கி அவனைச் சூழ்ந்து கிடந்தன, இப்படியிருக்க... ஒருநாள்...கோகுலத்து மன்னன் நந்தகோபன் மேலே கோபம் கொண்டுட்டான் இந்திரன். அதனாலே என்ன செய்தான் தெரியுமா?

கோதை : என்ன செய்தான்?

பெரியாழ்வார்: வருணனுக்கு ஆணையிட்டுட்டான். அதனாலே மேகங்களெல்லாம் திரண்டு, இருண்டு, இடி, இடித்து உருமிக்கொண்டு வந்தன. பெருமழை பெய்தது; கொட்டு கொட்டென்று மழை கொட்டிற்று. மேய்ந்து கொண்டிருந்த ஆநிரைகளெல்லாம் என்ன செய்யும்? பாவம், உலகத்து உயிர்களெல்லாமே என்ன ஆகுமோ ஏது ஆகுமோ என்று நடுநடுங்கி அரண்டன. அப்போ நம்ம கண்ணன்...

கோதை : உம்...... கண்ணன்?

பெரியாழ்வார்: கண்ணன் பார்த்தான்; அருகே பெரியமலை-கோவர்த்தனகிரி என்னும் மலை இருந்தது. அதை அப்படியே தூக்கிக் குடையாகப் பிடித்தான்! உயிர்களெல்லாம் பிழைத்தன. குன்றெடுத்துக் குடையாகப் பிடித்துக் கோக் கூட்டத்தைக் காப்பாற்றினான். மழை போல் மேனியன் மாந்தரையும் ஆநிரையையும் காக்க மலையெடுத்து மழையைத் தடுத்தான்.

கோதை : இன்னும் என்ன செய்தான் என் கண்ணன்?

பெரியாழ்வார்: ஆய்ச்சியர் பெண்களுடனே ஆய்ச்சியர் குரவை ஆடினான். ஆயர்குல பெண்களெல்லாம் மகிழ்ந்தாடிட தானும் மகிழ்ந்தாடினான். காயாம்பூ வண்ணன் ஆகிய கண்ணன், காரிகையர் பலருடன் கைகோத்தாடினான். அவர் அணிந்திருந்த மாலையைத் தானும் சூடினான். தன் மாலையை அவர்க்கும் சூட்டினான். அப்படியெல்லாம் ஆடி, ஆடி அக மகிழ்ந்தான் நம் கண்ணன்.

கோதை : எல்லாரும் மகிழத்தானே அப்படி கண்ணன் ஆடிப் பாடினான்?

பெரியாழ்வார்: ஆமாம் அம்மா!

கோதை : கண்ணன் ரொம்ப நல்லவன் இல்லையாப்பா?

பெரியாழ்வார்: ரொம்ப, ரொம்ப நல்லவன் ! சரி, கோதை மாலையெல்லாம் குடலையிலே எடுத்து வைம்மா. நான் பூந்தோட்டத்திற்குப் போய் வருகிறேன்.

கோதை : சரி அப்பா !

[மாலையை எடுத்து வைத்துக் கொண்டே] இது துளசி மாலை. "துளசி மாலை மகிழ்ந்தணியும் திருமால் அன்று காரிகையர் அணிந்திருந்த மாலையைத் தானும் அணிந்தான். தன் மாலையைக் கழற்றி அவர்க்கும் அணிந்தான்." கண்ணா ! நீ எவ்வளவு நல்லவன் ! உனக்கு இந்த மாலையும் பிடிக்குமல்லவா? ஆம். நிச்சயம் மகிழ்ந்து ஏற்றுக் கொள்வாய். இந்த மாலை? இதுவும் உனக்குப் பிடிக்கும். இது? இதுவும் தான் பிடிக்கும். உன் மார்பு அழகுக்கு இந்த மலர்மாலை ஏற்றது தானே! ஆகா, மிக நன்ருகத் தோற்றமளிக்கும். ஊகும்... அழகா இருக்குமோ என்னவோ? சொல்லு கண்ணு ! என்ன கண்ணு பேசாமல் இருக்கிருய்? சொல்லு! கண்ணு ! சரி, நானே சூடிக் கண்டுபிடித்து விடுகிறேன், அழகா இருக்குமா இல்லையா என்று. [மாலையைத் தானே அணிந்து கண்ணுடி முன் நின்று அழகு பார்த்து] ஆகா... நிச்சயம் உனக்கு இந்த மாலை பிடிக்கும். ஆமாம் கண்ணு, நான் சூடிப் பார்த்து விட்டேன். (மாலையைக் கழற்றிக் கொண்டு) உனக்கு அழகாக இருக்கும்.

பெரியாழ்வார்: (வரல்) எல்லாம் எடுத்து வச்சுட்டியாம்மா, வா கோயிலுக்குப் போய் வருவோம்.

கோதை : சரி, அப்பா !

## காட்சி 8

இடம் : பூந்தோட்ட வழி

நேரம் : மாலைப் போது

உறுப்பினர் : நம்பி, ரெங்கன்.

ரெங்கன் : அப்பா நம்பி ! நீ தோட்டத்துக்குத் தண்ணீரா தூக்குகிறே?

நம்பி : என்ன வென்று தெரிகிறது...

ரெங்கன் : இல்லே, நீ நடக்கிற பாதைக்குத்தான் தண்ணீர் தெளிக்கிறதாகத் தெரிகிறதே, நீ எங்கே பூச்செடிக்குத் தண்ணீர் தெளிக்கப் போகிருய்.

நம்பி : ஓகோ, தண்ணீர் ஒழுகுகிறதே என்று சொல்கிறியா. இப்படித்தான் சிலபேர், உயிர்க்கு உறுதுணையாவான் திருமாலை எண்ணி வழிபடுகிறப்போ உலகியலில் ஈடுபட்டு இடைவழியிலேயே முயற்சியை விட்டுடுருங்க. அதனலே பயனும் அடையாமல் போய் விடுகிருங்க.

ரெங்கன் : அதற்காக?

நம்பி : அதற்காக... இம்மாதிரியெல்லாம் வீணுகி விடாதீர்கள் என்று எச்சரிக்கை காண்பிக்கிறேன்.

ரெங்கன் : ஓகோ... பெரிய ஆழ்வாரு... எல்லோருக்கும் புத்தி புகட்டுகிருரு!

நம்பி : என்ன? என்னை ஆழ்வார் என்கிருயா? பரமனின் பக்தியிலே ஆழ்ந்து விடுகிற பெரியோரைத்தான் ஆழ்வார் என்பார்கள். சரி, நான் ஆழ்வாரோ இல்லையோ... இந்த மாதிரி உயர்ந்த கருத்துக்களைத்தானே நம் ஆச்சாரியார் நமக்கு நாள் தோறும் கற்பிக்கிருர். உம்... இதையெல்லாம் நீ எங்கே சிந்திக்கிறே? நீ தான் உயரத்திலே இருப்பவனுயிற்றே.

ரெங்கன் : உயரத்திலே இருப்பவனு?

நம்பி : (குரங்கைக் கூப்பிடுவது போல) அதுதான்... ரெங்கா ! ரெங்கா... உர்.

ரெங்கன் : என்ன? (நம்பி ஓட ரெங்கனும் ஓடல்)

நம்பி : இல்லை, ஐயையோ !

(தொடரும்)

# திருமுறை அறிமுகம்

'அரிது அரிது மானுடராதல் அரிது' என்பது நம் ஆன்றோர் வாக்கு. அந்த அருமை மானிடர் உண்டு, உடுத்து, இனத்தைப் பெருக்கி இன்புற்றுக் கழியும் வாழ்க்கையால் அமைந்ததன்று. உண்பது முதலியவற்றால் மனிதப் பிறப்பின் அருமை அமைவதாயின், இவ்வகைகளில் சிலவகைப் பறவைகள், விலங்குகள் முதலிய உயிரினங்கள் மக்களினத்தைக் காட்டிலும் சிறந்து விளங்குதல் கூடும். அதனால் மனிதப் பிறப்பின் அருமை உண்பது முதலியவற்றுக்கு அப்பால் அமைந்திருக்கின்றது என்பதை அறியலாம். அந்த அருமையினை—சிறப்பினை அடைய முடியாதிருப்பதால்தான் அவ்வுயிரினங்கள் சிற்றுயிர் எனக் கூறப்படுகின்றன.

'அரிது அரிது மானிடராதல்' என்னும் பாடல், 'தானமும் தவமும் தாம் செய்வராயின் வானவர் நாடு வழி திறந்திடுமே' என முடிகின்றது. இதனைச் சிந்திக்கும்போது வானவர் நாடு எய்தும் வாய்ப்புடைமையாமல் மானிடப் பிறவி அரிதாகின்றது என்னும் உண்மை புலனாகின்றது. மனிதன் மானிட நிலையினின்றும் உயர்ந்து மேல்நிலை எய்துவதற்கு—வானவர் நாடு அடைவதற்கு உரியவன் என்பதால் அதற்கு ஏதுவாக அமைந்த மானிடப்பிறவி அருமையினும் அருமை உடைத்தாகின்றது.

வானவர் நாடெய்துவதற்குத் தானமும் தவமும் ஆகிய ஒழுக்கம்—நடை இன்றியமையாதது என்பதனை அப்பாடல் உணர்த்துகின்றது. காலால் நடந்து செல்வது மட்டுமல்லாமல் நல்லொழுக்கத்தால்-நன்னடையால் செல்லும் செலவும் மக்களினத்திற்குரியதாகும். அதனால்தான் நான்கு கால்களைப் பெற்று நடத்தல் மட்டுமே கொண்டுள்ள விலங்குகள் கால்நடை என்று அழைக்கப்படுகின்றன போலும்!

ஒழுக்கம் மனிதப் பிறப்பினை நெறிப்படுத்தி அந்நெறி ஒழுகும் மக்களை உயர்த்தும் மாண்புடையது. ஒழுக்கத்தினால் உயர்வடையாத பிறவி பயனற்றது. ஒழுக்கம் இல்லாத—ஒழுக்கம் வழுவிய பிறவி, மனிதவடிவு கொண்டதாயினும் விலங்கின் பெற்றியதாய் இகழப் பெறும். மனிதப் பிறப்பில் அமைந்த உயிரைப் பேணுவதைக் காட்டிலும், அப்பிறவிக்குரிய சிறப்பினை நல்கவல்ல உயிரைப்பேணுவது மனிதப் பிறப்பெய்தியவர்களின் கடமையாகும். உயிரை மட்டும் பாதுகாத்து மனித உருவில் விலங்கு வாழ்வு வாழ்வதை விடுத்து, ஒழுக்கத்தைப் பேணிக் காத்து மக்களினும் உயர்ந்த நிலையினை அடைய முயலுதல் வேண்டும் என்னும் குறிப்பினை 'ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்னும் குறளில் வள்ளுவப் பெருந்தகை நுட்பமாகக் காட்டியுள்ளார்.

மானிடப் பிறவியின் அருமையினையும், பயனையும் நன்குணர்ந்த சமயச் சான்றோர்கள், அதனைக் கொண்டு அடைய வேண்டிய பயனை மக்கட் சமுதாயம் அடைந்து விடவேண்டும் என்பதனை வலியுறுத்திக் காட்டுவாராயினர். மக்கள் தாம் பெற்றுள்ள பிறவியின் அருமையை உணராது அதனைக் கொன்னே வீழ்த்தும் மடமை கண்டு, 'வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்' என்று அப்பரடிகள் அறிவுறுத்துகின்றார். சமய நெறியில் நின்று இறைவனுக்குத் தொண்டு செய்து நிற்றலாகிய ஒழுக்கமே மக்கள் மேற்கொள்ளத்தக்கது என்பதனை அடிகள் அத்தேவாரத் திருவிருத்தத்தின் இறுதியில் "கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதன்றே நந்தம் கூழைமையே" எனக் காட்டியுள்ளார்.

வினையின் வந்து வினைக்கு விளைவாகி நிற்கும் பிறவிப் பெருங்கடலின் நீங்கிப் பிறவாப் பெரு நிலையாகிய பேரின்பம் எய்த விழைவோர் பிறவி நீக்கத்தையே விரும்பி முயல்வர். "வேண்டுங்கால் வேண்டும்

முனைவர். அ.மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.

பிறவாமை' என்பது திருக்குறள். பிறப்பற முயலும் சான்ருேர்களும் அதற்கு வாய்ப்பாகக் கிடைத்தது இப்போதடைந்துள்ள பிறவி என்பதும், இதனைக் கொண்டே இனிப் பிறவி எய்தாத தன்மையினை அடைதல் வேண்டும் என்பதும் உணர்ந்து அருட் சான்ருேர்கள் அறிவுறுத்தியுள்ளனர். இறைவன் பொய்தீர் ஒழுக்கநெறி நின்று, அவன் திருமேனி கண்டு வழிபடும் பேறு பெறுவதாயின் அதற்குக் காரணமான பிறவி வேண்டும் என்றும் கூறியுள்ளனர்.

"குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இம் மானிலத்தே"

என்றும் தேவாரத்தில் 'கூத்தப் பெருமான் குரைகழலை ஏத்தப்பெறும் பேறு கிடைக்குமாயின் அதற்கேதுவாகும் பிறவி இவ்வுலகத்தில் வேண்டத் தக்கதாகும்' என்னும் கருத்தினை வலியுறுத்துகின்ருர்.

மக்களிடையே ஒழுக்கத்தை ஏற்படுத்தி அவர்களை நெறிப்படுத்தும் சாதனங்களிற் சிறந்ததாக அமைவது சமயமேயாகும். அச் சமயங்களிலும் தெய்வத்தை ஏற்றுக்கொண்ட சமயமே சாலச் சிறந்ததாகும். தெய்வத்தை உடன்படாத சமயங்கள் ஒழுக்கத்தை வலியுறுத்துதல் கூடுமாயினும் நடைமுறையில், தெய்வ நம்பிக்கையோடு இயங்கும் சமயமே மக்களை ஒழுக்க நெறியில் உய்ப்பதில் வன்மை மிக்கிலங்கக் காணலாம். மனித குலப் பொதுவறம் வகுக்க வந்த வள்ளுவப் பேராசான், இறைவனைச் சுட்டுகின்றபோது, ஒழுக்க நெறி நிற்பவராகக் காட்டியுள்ளார். பொறிவாயில் ஐந்தவித்தல் என்னும் பொய்தீர் ஒழுக்க நெறி இயல்பாக அமையப் பெற்றவன் இறைவன் என்கிருர். அதனுல் அவனை அடைவதற்கும், பொறிவாயிலைந்தவித்தல் என்னும் புலனடக்க ஒழுக்கம் வழியாகின்றது.

மக்களை நெறிப்படுத்தி நன்னிலை எய்துவிக்க, உலகில் ஆங்காங்கே அவ்வப்போது சிற்சில சமயங்கள் தோன்றித் தொண்டு புரிந்து வருகின்றன. தெய்வத்தை உடன்படாது, ஒழுக்க நெறிகளை மட்டும் வலியுறுத்தும் சமயங்கூட நடைமுறையில் தங்கள் சமய குரவர்களையும், தொண்டர்களையும் தெய்வ நிலையில் வைத்துப் போற்றும் வழிபாட்டினை ஏற்று நிற்கின்றன.

இறை உண்மையினை ஏற்று மக்களை நெறிப்படுத்தும் கடமை கொண்ட இந்தியச் சமயங்களில் சைவ சமயம் தொன்மைச் சிறப்பு வாய்ந்ததாகும். 'முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே' எனச் சைவ சமயம் சிவபரம்பொருளைப் போற்றுவது போலவே, அச்சமயமும் பழமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் விளங்குகின்றது.

இந்தியாவின் வடமேற்கிலிருந்த மொகஞ்சோதாரோ, ஆரப்பா என்னுமிடங்களில் அகழ்வாராய்ச்சி செய்து, பண்டை இந்தியாவின் மக்கள் சமயம் பண்பாடு முதலியவற்றில் உலகம் வியந்து போற்றும் பல உண்மைகளைக் கண்டு வெளியிட்ட மேனுட்டுப் பெரியார் சார் ஜான்மார்ஷல் என்பார், அப்பகுதிகளிற் கிடைத்த சான்றுகளைக் கொண்டு சைவ சமயத்தின் தொன்மையினைப் பின்வருமாறு புலப்படுத்தியுள்ளார் :-

"மொகஞ்சோதாரோவிலும், ஆரப்பாவிலும் யாங்கள் அறியக் கிடந்த அற்புதச் செய்திகள் பல. அவற்றில் சைவ சமயம் வெண்கலக் கருவிக் காலத்திற்கோ அதற்கப்பாலோ செல்லும் வரலாற்றையுடையது. ஆகையால் அது இப்போது உலகில் உயிருடனுள்ள சமயங்கள் எல்லாவற்றிலும் முன்னர்த் தோன்றியது என்னும் உண்மையைவிட அறியத்தக்க சிறந்த செய்தி வேருென்றுமில்லை.

('Among the many revelations that Mohanjodaro and Harappa have had in store for us, more perhaps in remarkable than this discovery that Saivism has a history going back to the Chaleolithic age or perhaps even further still and that thus it takes its place, as the more ancient living faith in the world'—*Sir John Marshall*—)

சிவஞான போதத்தை ஆங்கிலத்தில் முதன் முதலாக மொழிபெயர்த்த மேனாட்டுக் கிறித்துவ சமய ஊழியர் ரெவரண்ட் ஹோய் சிங்டன் என்பாரும் சைவ சமயத்தின் தொன்மை கிறித்துவ சகாப்தத்திற்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டதெனக் கண்டு சிறப்பித்துக் கூறி யுள்ளனர்.

பண்பாடு மிக்க தமிழ் மக்களின் வாழ்க்கை அன்பையும் அறத்தையும் அடிப்படையாகக் கொண்டது. அன்பு சிவமெனப்பட்டது. அன்பு நெறி சிவநெறியாயிற்று. சிவம் செம்மையாகும். அன்பின் அடிப்படையிலமைந்த செம்மை ஒழுக்க நெறி சிவநெறி எனப்பட்டது. அதுவே சைவசமயம். இந்தியா முழுவதும் சைவ சமயம் பரவியிருந்தபோதிலும் சித்தாந்த சைவ நெறி தோன்றிய இடம் தென்னகமாகும். தோற்று வித்தவர்கள் தமிழ் மக்களாவர். இவ்வுண்மை காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சாகுமாறு நமக்கு நாமே புகழ்ந்துரைத்துக் கொண்ட தன்று. கிறித்துவ சமய ஊழியம் புரிவதற்கு வந்து அக்கடமையைச் செவ்வனே செய்தவர் களாயினும் இங்குச் செழித்து விளங்கும் சைவ சித்தாந்த நெறியின் உண்மை இயல்பினை உணர்ந்து மறைக்காது வெளியிட்டமேலை நாட் டுச் சான்றோரும், தம்மைத் தமிழ் மாணவன் எனத் தம் கல்லறையிற் பொறிக்கச் செய்தவரு மான ரெவரண்ட் டாக்டர் ஜி. யு. போப் ஐயரவர்கள் பின்வருமாறு இதனைக் குறிப்பிட் டுள்ளனர்:-

"இந்தியச் சமயங்கள் எல்லாவற்றிலும் சைவ சமயமே மிக விரிவானதும், மக்களிடையே பரவியதும், ஐயத்திற்கிடமின்றி உண்மையில் மிகச் சிறந்ததுமாகும். சிறப்பாக அது தென்னிந்தியாவிற்குரியதாகவும், தமிழினத் தில் தோன்றியதாகவும் உள்ளது" (Saiva Siddhantam is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all the religious of India. It is peculiarly South Indian and Tamil religion.) ஜான் எச்.பியட் என்பார், "தென்னிந்தியாவிற்குரிய சைவ சித்தாந்தம் தமிழர் அறிவுத் திறனுல் விளைந்ததாகும். சைவ சித்தாந்தம் தமிழகத் தத்துவமாகும்" (Saiva Siddhanta philosophy of South India is one of the classical products of the Tamil Mind. Saiva Siddhanta is predominantly a Tamil Philosophy) என்கின்றார்.

பழந்தமிழ் மக்கள்தம் மெய்யுணர்வுச் சிந்தனையின் சாரமாகவே சைவ சமயம் விளங்குகின்றது. தென்னாட்டில் தோன்றிய தாயினும் எந்நாட்டு மக்களையும் ஏற்று வாழ்வளிக்கும் பெரு நெறியாக அது திகழ் வதால் அதனை உணரும் பிற சமயத்தாரும் தயங்காது பாராட்டுகின்றனர். செம்மை ஒழுக்கம் பேணும் சைவ சமயம் உலகிலுள்ள எந் நெறியாளர்களையும், எவ்வின மக்களையும் ஏற்றுப் பேரின்பமுறும் வழிகாட்ட ஆயத்தமாக விளங்கும் நிலையினை, அச்சமய இறைவனாக விளங்கும் சிவபரம் பொருளின் தன்மை சுட்டிப் பரவுவதன் வாயிலாக,

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி"

என்று மணிவாசகப் பெருமானார் காட்டி யுள்ளார்.

சைவம் தழைத்த தமிழகத்தில் காலப் போக்கில் சிவ நெறிக்கு மாறுபட்டதும் தெய்வ சிந்தனையற்றதுமாகிய சமணம், புத்தம் முதலிய சமயங்கள் தலைதூக்கலாயின. தமிழகச் சமயங்கள் வலிகுன்றவும், தெய்வம் பேணாத அயற்சமயங்கள் வளம் பெறவுமான நிலை ஏற்பட்டது. தெய்வம் பேணாத அப் புறச் சமயங்களின் வலி குறைத்து, தமிழ்ச் சமயங் களுக்கு மீண்டும் வாழ்வளித்த பெருமை நாயன்மார்களையும் ஆழ்வார்களையுமே சாரும். அப்பர் சம்பந்தர் முதலிய சமய குரவர்கள் தோன்றிச் சைவ சமயத்திற்குப் புத்துயிரும், புதுப்பொலிவும் அளித்தனர். அவர்கள் உருவாக்கிய பக்தி இயக்கம் பதிக நெறியாகத் தமிழகத்தில் பாய்ந்து அதனைச் செழிக்கச் செய்தது. அவர்கள் தோற்றுவித்த பாடல்கள் பக்திச் சுவை நனி சொட்டும் பாங்கிலமைந்து, உலக பக்தி இலக்கிய வரிசையில் முதலிடம் பெறும் சிறப்புடன் திகழ்கின்றன. அதன் சிறப்பினை டாக்டர் எல். டி. பார்னர் என்பார், இந்தியாவின் இதயம் என்னும் நூலில் "சொற்போக்கழகும் உணர்ச்சியும் உருக்கமும் ஒளிரும் பெருமித நடையுமுள்ள ஓர் இலக் கியத்தினையோ அல்லது பக்திச் சுவை

நிரம்பிய இறைவழிபாட்டிலக்கியத்தையோ தமிழர் சமயத்தைப் போல வேறெச் சமயமும் தோற்றுவித்திலது. (No cult in the world has produced a richer devotional literature or one more instinct with brilliance of imagination, fervour of feeling and grace of expression)

அப்பர், சம்பந்தர் முதலிய நாயன்மார்கள் உருவாக்கிய பக்திப் பனுவல்கள் சைவ சமயத்திற்குப் புத்துயிரும், தமிழிலக்கியத் திற்குப் புதுப் பொலிவும் தந்தன. பக்திப் பனுவல்களாகிய தோத்திரப் பாக்களில் இலைமறை காயென இலங்கிய சாத்திரக் கூறு களையும் முன்னையோர் கண்டு வைத்த சைவ சமய மெய்யுணர்வுக் கோட்பாடுகளையும் ஒழுங்கு படுத்தி மெய்கண்டார் முதலான சந்தான குரவர்கள் சைவ சமய உண்மைகளைச் செய்யுள் வடிவில் வடித்துத் தந்துள்ளனர். அவை சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனப்படும் தோத்திர நூல்களும், சாத்திர நூல்களும் சைவ சமயத்தின் கண்களென அமைந்து அதனை விளங்கச் செய்கின்றன.

எள்ளின்றெடுபடும் எண்ணெய் போல ஒரு மொழியின் இலக்கியத்தினின்று இலக்கணம் உருவாகின்றது. சைவ சமயத்தின் இலக்கியங் களாகத் திகழும் தோத்திர நூல்களிலிருந்து, இலக்கணமென விளங்கும் சைவ சாத் திரங்கள் உருவாயின. சைவ தோத்திரங்களும், சாத்திரங்களும் உயிர்ப்புடைய சமயமாகிய சைவ சமயத்தினை நடைமுறை உலகிலும், தத்துவ உலகிலும் வாழச் செய்கின்றன. அவற்றின் மேன்மையினையும் இன்றியமை யாமையினையும் விளக்க வந்த அப்பரடிகள் இறைவன் அவற்றின் வடிவாய் விளங்கு கின்றார் எனக் காட்டியுள்ளார் "சொல்லும் பொருளெலாமானார் தாமே, தோத்திரமும் சாத் திரமும் ஆனார்தாமே" என்பது அடிகள்தம் வாக்காகும்.

தங்கள் சமய குரவர்கள் அருளிய தோத்திரப் பனுவல்களைத் தொகுத்து முறை படுத்திச் சைவப் பெருமக்கள் போற்றி வரு கின்றனர். அவையே சைவத் திருமுறைகள் எனப்படும்.




## திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?

### "வழிபாட்டு உரிமை உண்டு"

வீரா. பாலசுப்பிரமணியன்,
("சக்திதாசன்") நாரணமங்கலம்

சென்ற இதழில் திருவாளர் வேலுசாமி அவர்கள் இறைவனை வழிபட ஆத்மார்த்தம், பரார்த்தம் என்ற இருவழி முறைகள் உண்டு என்றும், ஆத்மார்த்தம் என்பது சிவதீட்சை பெற்றவர் தன் வீட்டிலிருந்து இறைவனை வழிபடல் என்றும், பரார்த்தம் என்பது இறைவனுக்குரிய விசேட வழிபாடுகளை ஆதிசைவ அர்ச்சகர்களைக் கொண்டு செய்விப்பது என்றும் தெரிவித்துள்ளார். ஆனல் மறைந்த மாபெரும் அறிஞர் ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் பரார்த்தம் என்பதற்குக் கீழ்க்கண்டவாறு பொருள் கூறுகின்ருர்: "பரார்த்தம் என்பது உலகினர் வணங்கிக் கடைத்தேறுவதற்காகத் தேவர்கள், ரிஷிகள், அரசர்கள் முதலியவர்களால் தாபிக்கப்பட்ட ஆலயங்களில் பூஜிப்பதாகும்'' என்கிருர். இதுதவிர வீரசைவ அர்ச்சகர்கள்தான் வழிபாடு புரிய உரிமை உடையவர்கள் என்று அவர் எவ்விடத்தும் மொழிந்ததாகத் தெரியவில்லை.

அடுத்து "அந்தணர் என்போர் அறவோர்'' எனும் திருக்குறளுக்கு, அந்தணர் என்ற சொல்லுக்கு ஓர் இனத்தாரைச் சுட்டிக் காட்டியுள்ளமை ஏற்புடைத்தல்ல. உண்மை நோக்கின் "எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுபவனே அந்தணன்'' என்புழி அஃது ஓர் இனத்தாரைக் குறிக்கவில்லை என்பதையும், கீழ்ப்பட்ட வகுப்பினரிடத்தும் மேற்காணும் பண்புடைய அந்தணர்கள் உள்ளனர் என்பதையும் நம்மால் அறிய முடிகிறது.

மூன்ருவதாக "ஜனநாயக நாட்டில் உரிமை உண்டு என்பதற்காக எல்லோரும் சட்டசபை செல்ல முடியுமா? பிரதிநிதிகள் வாயிலாகத் தானே தேவைகளைப் பூர்த்தி செய்ய முடிகிறது'' என்று தெரிவித்துள்ளார். நான் கேட்கிறேன். சட்டசபை பிரதிநிதிகள் அனைவரும் ஒரே சாதியினரா? இல்லையே. அவ்வாறிருக்கும்போது "திரு. வேலுசாமி" அவர்கள் மட்டும் கோவில்களில் பல சாதியைச் சார்ந்த சீலர்கள் வழிபட ஏன் விரும்பவில்லை?

அடுத்து "தென்னுடைய சிவனே போற்றி'' என்பதனைக் கோடிட்டு, "சிவபெருமானல்தான் தென்னாட்டிற்குச் சிறப்பு. அதனுற்ருன் வடநாட்டு ஆலயங்களைத் தென்னாட்டு ஆலயங்களுடன் ஒப்புநோக்குதல் தகாது'' என்ருர். நான் கூறுகிறேன்: "கண்ணி ணுற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்" என்கிறது பெரியபுராணம். இதுபோன்றே பல சிவனடியார் தங்கள் பாசுரங்களில் சிவபிரானுக்குரிய வாழிடங்களில் தலையாயது "திருக்கயிலையே'' என்பது திரு. வேலுசாமி அவர்கள் அறியாததல்ல. ஏனே மறந்துவிட்டார்?

இறுதியாக "சிவாகமம்'' என்ற நூலைப்பற்றியும் ஆகமங்கள், திருமந்திரம் போன்ற சில நூல்களினின்றும் சில வரிகளைக் கோடிட்டு "வீரசைவ அர்ச்சகர்களே இறைவனை வழிபடத் தக்கவர்கள்'' என மொழிந்துள்ளார்.

சான்ருென்று கூறுவேன். அரசுபணி புரியும் ஒருவர் தமக்குப்பின் தன் இனத்தவரே அப்பணியில் நீடித்துப் பணியாற்ற இடம் தரவேண்டும் என்று வலியுறுத்தினல், சட்டம் அதற்கு இடம் தருமா?

அதுபோலத்தான் இன்றைய சமுதாயம் தங்கள் சமுதாயம் சீர்கேடின்றிக் கட்டுப் பாடாக, ஒழுங்குடன் இயங்கிவர வேண்டுமே என்றதோர் சூழ்நிலையில் இருந்ததால்தான் இறைவனை வழிபடும் பொறுப்பு வீரசைவ அந்தணர்களிடம் இருந்ததை ஒரு பொருட்டாக எண்ணவில்லை. வாழ்வின் நலமே முக்கிய நோக்காக இருந்தது. அதனை வைத்துக் கொண்டே பரம்பரைப் பாத்தியதைக் கொண் டாடுவது அழகல்ல.

இதுகாறும் சென்ற இதழில் திரு. வேலுசாமி அவர்கள் தெரிவித்த கருத்துகட்கு மாற்றுரை பகர்ந்தேன். அடுத்து நான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு வருகிறேன்.

உலகம் முழுமைக்கும் இறைவன் பொது வானவன். யாவரும் மறுப்பதற்கில்லை. அவ்வா றிருக்க அனைவரும் அவனைப் பூவும் நீருமிட்டு வணங்கிட மட்டும் உரிமையில்லையே, ஏன்?

அமெரிக்காவில் சிக்காகோ என்னுமிடத்தில் பெருந்தகை விவேகானந்தர் அவர்கள் இந்து மதத்தின் சிறப்பை வலியுறுத்திப் பேசும் போது, "என் உடன்பிறப்புகளே! பண்டிதர் மாக்ஸ்முல்லர் என்பவர் கூறுகிறார். கேளுங் கள்: சிறந்த வழிபாடு என்றால் என்ன தெரியுமா? மனிதர்களைக் கட்டுப்பாட்டுக்கு உட் படுத்தாது சுதந்தரத்துடன் அவரவர்க்குரிய முறையிலே இறைவனைத் தொட்டு வழிபாடு செய்தலேயாகும் என்றார். அதனை இந்து மதம் மனதார ஏற்கத் தயாராக உள்ளது.'' என்று அன்றே மொழிந்தார்.

சாதி வேற்றுமை ஒழிய வேண்டுமாயின் இது போன்ற சமதர்ம நெறியில் வழிபாடு புரிதல் ஓர் சிறந்த வழியாகும். பத்திரகிரியார், பட்டி னத்தார் போன்றோரும் இதனையே வலியுறுத்து கின்றனர்.

ஆலயம் என்பது ஆன்மா ஒன்றுபடும் இடம் ஆகும். ஆணவம், அகந்தை, ஐம்புல மயக்கம் இன்னவற்றைப் போக்கி நிம்மதி, சுகம் நல்கும் இடமாகும். அங்குக்காணப்படும் கோபுரங்கள், மண்டபங்கள், நீராழிகள், கொடி மரங்கள், கருவறைகள், பிரகாரங்கள், இன்ன பல, பலநூறு தத்துவங்களைப் பறைசாற்று வன; அத்தகைய புனித ஆலயத்தில் வழிபாடு புரிய விழையின் நாம் சீலர்களாக மாறவேண் டும். ஆன்மசுத்தி, ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகிய ஐவகைச் சுத்திகளையும் செய்யக் கற்றுக் கொள்ள வேண் டும், அதனாற்றான் ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம் எனும் ஐவகைப் பாசங் கள் அகலும். அந்நிலையில் பதினாறு உபசாரங் களையும் அறிந்து, மன ஒருமைப்பாட்டுடன் இலங்கி, இறைவனை வழிபாடு புரியின், அவன் எந்த சாதியிலே தோன்றியிருந்தாலும், அவன் செய்யும் வழிபாட்டினை ஆண்டவன் மனநிறைவோடு ஏற்றுக்கொள்வான் என்ப தில் எள்ளளவும் ஐயமில்லை.

இவ்வாறான நிலைபெற, ஒழுக்க சீலர்களாக மாறிட–இறைவனை வழிபாடு புரிந்திட நமது ஒப்பற்ற தமிழக அரசு கீழ்ப்பட்ட வகுப்பினர் சிலருக்கு ஆகமப் பயிற்சி நல்கி வருவது மிகவும் பாராட்டுதற்குரியதாகும். அதோடு மட்டும் நிறுத்திக்கொள்ளாமல் பல அறிஞர் களின் துணைகொண்டு பல ஆய்வுகள் புரிந்து கலைப்பெட்டகமாக, அறிவுப் பாசறையாக, மன ஒருமைப்பாட்டின் நிலைக்களமாய் விளங்கும் ஆலயங்களின் புனிதத் தன்மைக்கு எவ்வித மாசும் நேராதவண்ணம் அனைவரும் வந்து இறைவனைத் தொட்டு பூவும் நீரும் இட்டு வழி பாடு புரிவதற்கேற்ற வகையில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளை ஆலயங்களில் ஆங் காங்கே பலகைகளில் பொறித்தும், வழிகாட்டி கள் பலரை நியமித்து விளக்கங்கள் அளிக்கச் செய்தும் நம் அரசு ஆலய நிர்வாகத்தில் தலையிட்டு நல்லதோர் நெறியினைக் காட்டிட வேண்டுகிறேன்.

இறுதியாக ஒன்று: கண்ணப்பர், நந்தனர் போன்றவர்களை வணங்குகின்ற இச்சமுதாயம் அனைவரும் இறைவனைத் தொட்டு வணங்கிட வேண்டும் என்ற கொள்கையை ஏற்க வேண் டும். சாதி வேற்றுமை என்பது ஓர் தடைக்கல். அதனை உடைத்தெறிந்து சமதர்ம நெறியில் இறைவன் ஆலயக் கருவறை புகுவோம். வழிபாடு புரிவோமாக!!

## திரு. ச. முத்துக்குமரன் அவர்கள்

"திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா இல்லையா?" என்பது பட்டிமன்றத் தலைப்பு ஆகும். திரு. கார்மேகம் "கருவறைக்குள் அனைவரும் சென்று வழிபடலாம்" என்று வற்புறுத்துகிறார். திரு. வேலுசாமி குருக்கள் கருவறைக்குள் "இறைவனுக்கு அதற்கென உள்ள ஆதிசைவ குருக்கள் மூலமே வழிபாடுகள் நடத்திக் கொள்ள வேண்டும்" என்று கூறுகிறார். கருவறைக்குள் சென்று வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டு என்பது என் கருத்து. இந்தக் கட்டுரை, திரு. கார்மேகம் கட்டுரைக்கு ஓரளவுக்கு மறுப்பும், திரு. வேலுசாமி, கட்டுரைக்கு மறுப்பும் ஆகும்.

1. திருமூலரும் திருவள்ளுவரும் அந்தணர்களைப் பற்றிக் கூறியுள்ளதை எடுத்துக்காட்டுகிறார், திரு. வேலுசாமி. அவர்கள் இருவரும் அந்தணர் என்பது பிறப்பால் கிடைக்கும் பட்டம். பிறப்புவழி அந்தணர்தான் வழிபாடு செய்யலாம் என்று கூறவில்லை. மற்றும் "சுந்தரர் தடுத்தாட் கொண்ட புராணத்தில் என்று" திரு. வேலுசாமி அவர்கள் குறிப்பது சேக்கிழாரின் பெரிய புராணத்தில் உள்ள ஒருபாடலின் ஒரு பகுதி. அங்கும் நம்பியாரூரர் வழிவழி அடிமை செய்யும் வேதியர் குலத்தில் தோன்றினர் என்றே உள்ளது. வேதியர்தான் வழிபாடு செய்யலாம் என்று கூறப்படவில்லையே. வேதியர் ஆவதற்குப் பிறப்பு ஒன்றுதான் வழி என்றும் கூறப்படவில்லையே.

திருவள்ளுவர்,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்
சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்
கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்"

என்று விளக்கமாகக் கூறியிருப்பதால் பிறப்பு வழி அந்தணரை அந்தணராக அவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது தெளிவு.



2. அந்தணர் என்போர் அறவோர் என்றார் திருவள்ளுவர். திருமூலர் அந்தணர் இறைவனை வழிபாடு செய்வர் என்றார். வழிவழி அடிமை செய்யும் வேதியர் என்றார் சேக்கிழார். இவர்கள் குறிக்கும் அந்தணர்-வேதியர் ஆகியோருக்கு திரு. வேலுசாமி விரும்பும் இன்றைய பிராம்மணர் (ஆரிய வேதியர்) ஈடாவாரா? சாப்பாட்டுக் கடை வைத்திருப்பவர், தொழிற்சாலைகள் நடத்துபவர், கணக்கர், எழுத்தராக வேலை பார்ப்பவர் அவர் சந்ததியர் தம்மைப் பிறப்பால் பிராம்மணர் என்று கூறிக் கொள்பவர், அறவோரா? வழிவழி இறைவனுக்கு அடிமை செய்பவரா? சீலமுடையவர் தானா?

3. திரு. வேலுசாமி எடுத்துக்காட்டும் சிவாகமம், காரணாகமம் என்பவை ஆதிசைவ அந்தணர்தான் இறைவனை வழிபாடு செய்ய உரியவர் என்கின்றன. இவை குறிக்கும் ஆதிசைவ அந்தணரும் பிராம்மணரும் ஒருவரேவா? இவை யாரால் எப்பொழுது எழுதப்பட்டவை? இவை பிறப்புவழி பிராம்மணரையே வழிபாடு செய்யத் தகுந்தவர் என்கின்றன என்றால் வியாச பாரதத்தில் அசரீரி கேள்விகளுக்குத் தருமன் கூறிய கீழுள்ள பதிலை அத்துடன் நோக்குதல் வேண்டும்.

"குலமும் படிப்பும் பிராம்மண்யத்திற்குக் காரணம் அல்ல; ஒழுக்கமே காரணம். ஒழுக்கத்தில் குறைபட்டவன் பிராம்மணன் ஆகமாட்டான். எவ்வளவு படித்தவன் ஆனாலும் கெட்ட வழக்கங்களில் சிக்கியவன் பிராம்மணன் ஆக மாட்டான். நான்கு வேதங்கள் ஓதியிருந்தாலும் கெட்ட நடத்தையுள்ளவன் இழிகுலத்தவன்."

(மேற்கோள்: வியாசர் விருந்து—இராசாசி எழுதியது)

இதை அறிந்தும் ஆகமத்தில் பிறப்புவழிப் பிராம்மணியத்தை வற்புறுத்துவதாகச் சொன்னால், அது உலகியல் நடைமுறைக்கு ஒவ்வுமா? வியாசருடைய கருத்துக்கும் ஒவ்வாத கருத்து உடையவர் சீலமுடையவரா?

4. "தென்னாட்டு ஆலயங்களுடன் வடநாட்டு ஆலயங்களை ஒப்பிட்டால் தகுமா?" என்கிறார் திரு. வேலுசாமி. நாடு முழுவதும் கோயில்கள்

மனிதனுக்கு அறியாமையைவிடக் கொடிய பகை வேறு இல்லை; மயக்கத்தைவிடத் தீமை தருவது வேறு எதுவும் இல்லை. அதுவும், அறியாமையை அறிவு என்று கருதி—நம்பி மயக்கும் நிலை மிகவும் கொடுமையானது.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

ஆகம முறைப்படித்தான் கட்டுப்பட்டு, ஆகம முறைப்படித்தான் வழிபாடு செய்யப்படுகிறது என்றால், தமிழ்நாட்டுக் கோயில்களுக்கும் வடநாட்டுக் கோயில்களுக்கும் அமைப்பு, வழிபாட்டுமுறை இவற்றில் ஏன் வேற்றுமை? பிராம்மணர்களிலே வடநாட்டார்க்கும் தமிழ் நாட்டார்க்கும் பழக்க வழக்கங்கள், சாப்பாடு இவற்றில் ஏன் வேற்றுமை? வடநாட்டுப் பிராம்மணர் பிராம்மணர்தானா? அந்தக் கோயில்கள் ஆகம முறைப்படி கட்டப்பட்டவையா? அங்கு வழிபாடு ஆகம முறைப்படி நடக்கிறதா? திரு. வேலுசாமி இக்கேள்விகளுக்கு பதில் இல்லை என்பதுபோல் எழுதியிருக்கிறார். ஆனால் இல்லை என்று கூற வில்லை. காசி கோயில் அவர் கூற்றுப்படி ஒரு புனிதமற்ற இடம் ஆகும் என்றாகிறது. இவற்றைப் பற்றி அவர் விளக்கமாகக் கூறாமல் ஏன் விட்டுவிட்டார்?

5. சட்டம் ஒழுங்கு இவற்றின் முக்கியத்துவத்தை திரு. வேலுசாமி வற்புறுத்துகிறார். பொது இடங்களில் எல்லா உரிமையும் உண்டு என்று வாதாடுவது தவறு. உரிமை அளவோடுதான் வழங்கப்படும். அது மற்றவர் உரிமையைக் குறைப்பதாக இருக்கக் கூடாது. கோயிலில் யார் எதைச் செய்யலாம் என்ற வரைமுறை வேண்டும். சீலமுடையோரையே கருவறைக்குள் அனுமதிக்கலாம். மற்றவர் வெளியில் நின்றே வணங்கலாம்.

கண்ணப்பர், அப்பர் போன்றோர் கருவறைக்குள் சென்று வழிபட்டதை திரு. கார்மேகம் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் நாயன்மார்கள்; சீலமுடையோர். அவர்கள் கருவறைக்குள் சென்று வழிபடலாம். அதனால் எல்லோரும் செல்லலாம் எனலாமா?

வாதவூரார்,

"தென்னாடுடைய சிவனே போற்றி
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி"

என்றதை திரு. வேலுசாமி குறித்துள்ளார். அந்த வாதவூரார் தமிழில் பாடியதை விரும்பிக் கேட்டு ஒலைச் வரலாறு எழுதினான் இறைவன் (மேற்கோள்: நால்வர் வரலாறு, கழக வெளியீடு). அந்த இறைவனுக்குத் தமிழில் அருச்சனை செய்வது தகாது, வடமொழியில் தான் அருச்சிக்க வேண்டும் என்பவர் சீலமுடையவரா? "இறைவன் தமிழில் அருச்சனை செய்தலை விரும்பான்" என்பவன் கடவுள் நம்பிக்கையுடையவனா? அவன் கருவறைக்குள் செல்லலாமா?

6. சீலமுடையோரைத்தான் கருவறைக்குள் சென்று வழிபாடு செய்ய அனுமதிக்க வேண்டும். சீலமற்ற சிலர் இன்று இதைச் செய்ய அனுமதிக்கப்படுகின்றனர். அவர்களை வெளியேற்ற வேண்டும்.

7. வாதவூரார்

வேண்டத் தக்க தறிவோய் நீ
வேண்ட முழுதுந்தருவோய் நீ
வேண்டும் அயன் மாற்கரியோய் நீ
வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாதருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே
(திருவாசகம்-குழைத்தப் பத்து, பாடல் 6)

என்று விளக்கியுள்ளார். அவனுக்குத் தெரியும் எது சரி-எது தவறு என்று. அவன் இன்று நடக்கும் தவறுகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். எப்பொழுது எப்படி அதைச் சீர் செய்ய வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். அவன் அதைச் செய்வான் என்ற நம்பிக்கையுடன் அவன்தாள் வணங்கி இந்தக் கட்டுரையை முடிக்கின்றேன்.

ஒழுக்கம்

பிறர்க்குத் தீமை செய்யாமல் இருப்பதே சிறந்த ஒழுக்கமாகும். தனிமனித ஒழுக்கத்திற்குச் சமுதாயப் பற்றுக்கோடு வேண்டும்.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# கண்டதும் கேட்டதும்

பேட்டிகண்டவர்கள்-திரு. பழ-தரும-ஆறுமுகம்,
திரு. சீனி-விசுவநாதன்.

சென்ற இதழின்—(தொடர்ச்சி)

அறிவியல் வளர்ச்சியினுல்-அதாவது விஞ்ஞான அறிவு வளரவளரச் சமயமும், சமய நம்பிக்கைகளும் அழிந்துபடுமா?

ஒருகாலும் அழியாது. அறிவியல் வளர்ச்சிக்கு அந்தச் சக்தி இல்லே. சமய உணர்வுகள் அழியுமாஞல் இந்தியாவே அழிந்ததுபோலத்தான்.

இந்த இருபதாவது நூற்ருண்டை "விஞ்ஞான முன்னேற்ற நூற்ருண்டு" என்று பலரும் சொல்லிக்கொண்டு வருகிருர்கள். அதாவது, மனிதன் எந்தத் துறையை எடுத்துக்கொண்டாலும் அதில் தன் அறிவை ஆழமாகச் செலுத்தி இருக்கிருன். ஆனல், அவனுடைய வாழ்க்கைக்கு அதிகமான ஆபத்து ஏற்பட்டுக் கொண்டு வருகிறது. அவனுடைய சுபாவத்திலேகூட ஒரு மாறுதல் உண்டாக்கிக் கொண்டு வருகிறது. வேகம், வேகம் என்று சொல்லிக் கொண்டு அவன் அமைதியின்மையைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிருன். மனத்திருப்தி இல்லாவிட்டாலும் மன நிம்மதி கூட அவனுக்குஉண்டாகவில்லே. விஞ்ஞானத்தின் துணேயினுல் விளேபொருள்களின் உற்பத்தி அதிகமாக அதிகமாக ஜனங்களின் வறுமையும் அதிகமாகிக் கொண்டே போகிறது. சுருங்கிய காலத்திற்குள் அதிகமான இடங்களில் சகோதரத்துவம், சமத்துவம் என்னும் அழியா விதைகளேத் தெளித்துக்கொண்டு செல்வதற்கு உபயோகிக்கப்படவேண்டிய ஆகாயவிமானங்கள் இப்பொழுது விஷப் பொருள்கள் நிறைந்த வெடிகுண்டுகளே, ஒரு பாவமுமறியாத ஏழை ஜனங்கள்மீது கொட்டிக் கொண்டு போகின்றன. இவையெல்லாம் முன்னேற்றமா? பிற்போக்கா?

உண்மையான முன்னேற்றம் என்று சொன்ஞல் சன்மார்க்கத்திலே அதாவது அன்பு நெறியிலே முன்னேறிச் செல்வதுதான். மற்ற முன்னேற்றங்கள் எல்லாம் இரண்டாம் பட்ச முன்னேற்றங்களே என்று டாக்டர் ஆர். ஆர். மார்ரெட் என்ற அறிஞர் கூறியுள்ளார். மெய்ஞ்ஞானத்துள் விஞ்ஞானம் அடக்கம்.

சமுதாய நலனேப் பேணுவதில் அக்காலத் திருக்கோயில்கள் எந்தெந்த முறைகளே மேற்கொண்டன? தற்காலத் திருக்கோயில்கள் செய்யும் பணிகள்பற்றித் தங்கள் கருத்து என்ன?

சமுதாய ஒருமைப்பாட்டை வளர்ப்பதில் அக்காலத் திருக்கோயில்கள் கண்ணும் கருத்துமாக இருந்தன. சமய அறிவை வளர்ப்பதில், சமயபோதனே தருவதில் அக்காலக் கோயில்கள் சிறந்து விளங்கின. சமுதாய நலனேப் பேணவே கோயில் கண்டனர் ஆன்ருேர். சுருக்கமாகச் சொன்ஞல், அந்தக் காலத் திருக்கோயில்கள் கல்விக் கூடங்களாக-நீதி மன்றங்களாக-கலேக் கூடங்களாகத் திகழ்ந்தன மக்களின் வாழ்வியலினின்றும் கோயிலேப் பிரித்துப் பார்க்க முடியாத நிலேயில் இருந்தது. பக்தி இலக்கியங்கள் வளரவும், பெருகவும் வழிவகை செய்தன. கல்வி ஞானம் இல்லாதவர்க்குக் கேள்வி ஞானம் மூலம் கல்வி புகட்ட இராமாயண-மகாபாரத கதைகள், நீதிமுறைக் கதைகள் காலட்சேபங்களாக நடத்தினர். தற்காலக் கோயில்கள் காலத்தின் தேவையையறிந்து செயல்படுகின்றன. சமுதாய வாழ்வில்—வளர்ச்சியில் கோயிலின் பங்கு சிறப்புடையது.

தங்கள் வாழ்வில் மறக்க முடியாத—இலக்கியத் தொடர்புடைய நிகழ்ச்சி ஏதாவது உண்டா?

நிகழ்ச்சிகள் நிறைய உண்டு. இல்லற வாழ்க்கையை நடத்திக்காட்டிய குடும்ப விளக்காகவும், நாற்பத்திரண்டு ஆண்டுகள் இணேபிரியாதிருந்த இலட்சிய மனேவியாகவும் வாழ்ந்த மங்களத்தின் மறைவே மறக்க முடியாத நிகழ்ச்சிதான்.

(இந்தச் சமயத்தில் அவருடைய மனத்தை வேறு திசையில் திருப்பத் தமிழ்ப் பெரியார் அவர்களேப் பற்றிக் கேட்கிருேம்.)

திரு. வி. க. அவர்களேப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல முடியுமா?

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் என்று சொன்ஞல் தான் எனக்கு மன நிறைவு உண்டாகிறது.

அறிவிலே, உலக அனுபவத்திலே, ஆற்றலிலே அவர் எனக்கு மூத்த சகோதரர். அவருக்கு நான் இளேய சகோதரன். சகோதர முறையிலேயே நாங்கள் பழகி வந்தோம்.

அலுவலக நேரங்களில் அவர் ஆசிரியராகவும் நான் உதவி ஆசிரியர்களுள் ஒருவனாகவும் இருந்தோம். மற்ற நேரங்களில் சகோதரர்கள் தான். முதலியார் பல சமய உண்மைகளை ஆராய்ந்து தெளிந்தவர். அவர் ஒரு சமரஸ ஞானி. எல்லாச் சமயங்களும் ஒரே உண்மையைத்தான் போதிக்கின்றன என்பதைச் சொற்பொழிவுகளின் வாயிலாக விளக்கம் தருகின்றபோது கேட்டவர் யாரும் பிரமிப்படைவர்.

முதலியார் கண்களுக்குச் செய்யப்பட்ட அறுவை சிகிச்சை வெற்றிகரமாக முடியவில்லை. கண் பார்வையை அடியோடு இழந்து விட்டார். உடலும் மிகவும் நலிந்து போயிருந்தது. இது தெரிந்ததும் நான் பதைபதைத்துப் போனேன்; அவர் வீட்டை நாடி ஓடினேன்.

மாடித் தாழ்வாரத்தில் வெறும் பாய்மீது கிடத்தப்பட்டிருந்தார். கை கால்கள் வீங்கி இருந்தன. எறும்புகள் இவற்றின் மீது ஊர்ந்து கொண்டிருந்தன. நான் கனைத்துக் கொடுத்தேன். என் குரலைக் கேட்டதும், என்னைத் தம்மருகில் அழைத்து என்னிரு கைகளையும் பிடித்துத் தமது மார்பின்மீது அழுத்தமாக வைத்துகொண்டார். நான் உரக்க அழ ஆரம்பித்து விட்டேன். "அழாதீர்கள்; எல்லாம் ஆண்டவன் திருவருள். விதி யாரை விட்டது" என்றார்.

பின்னர், "நான் ஒன்று சொல்கிறேன்' கேட்கிறீர்களா?" என்றார்.

"சொல்லுங்கள்" என்றேன் நான்.

"இரவு நேரங்களில் எழுதாதீர்கள்; படிக்காதீர்கள்; ஆகாரத்தில் கீரை வகைகளை நிறையச் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்றார்.

அவர் என்மீது வைத்துக்கொண்டிருந்த அன்புக்கு ஈடு இணை உண்டோ?

**பேரவை ஆற்றிவரும் சமய-சமூகத் தொண்டுகள் குறித்துத் தங்கள் கருத்து என்ன?**

தெய்விகப் பேரவை திறம்படச் செயலாற்றுகிறது; அதனுடைய பணிகள் சிறக்க அனைவரும் ஒத்துழைப்புத் தர வேண்டும். பள்ளிகளில் சமய பாட போதனை செய்வது. சிறைச்சாலை சென்று கைதிகளுக்கு நன்னெறி போதிப்பது-மருத்துவ மனைகளுக்குச் சென்று சமயக் கருத்துக்களைச் சொல்வது-போன்ற செயல்கள் வரவேற்கத்தக்கன.

**இளைஞர் சமுதாயத்திற்குத் தாங்கள் கூறும் அறிவுரைகள் ஏதாவது இருந்தால்...**

'மகனே உனக்கு' என்ற நூலில் இளைஞர்க்கு வேண்டியதையெல்லாம் எழுதி உள்ளேன்.

கடமையைச் செய்ய வேண்டும்.
தன்னம்பிக்கையோடு வாழ வேண்டும்.
சத்தியத்தைச் சொன்னால் நித்தியம் வாழலாம்.
முயற்சியைக் கைவிட்டு விடக் கூடாது.
இன்னின்ன மாதிரி நடந்து கொள்ள வேண்டுமென்று சொல்லக் கூடாது. நடந்து காட்ட வேண்டும்.
ஒழுக்கத்திற்கு உயர்வு கொடுக்க வேண்டும்
நல்லதை எண்ணினால் மட்டும் போதாது; அந்த எண்ணத்தைச் செயலில் கொண்டு வர வேண்டும்.
சோர்வு கொள்ளக் கூடாது.
அஞ்சாமையை ஆபரணமாகக் கொள்ள வேண்டும்.
எல்லோரிடத்தும் அன்பு செலுத்த வேண்டும்.
பெரிய மனிதனாக-அதாவது மனிதத் தன்மையுடன் நடந்து கொள்ள வேண்டும்
தலை குனியாது நிமிர்ந்து நிற்கவேண்டும்.

**அருளோசை வாசகர்களுக்குத் தாங்கள் தரும் சிறப்புச் செய்தி ஏதேனும் உண்டா?**

"ஸர்வே ஜனா சுகினோ பவந்து"

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லால் வேறொன் றறியேன் பராபரமே"

இவையே என்னுடைய வாழ்க்கையின் மூலமந்திரங்கள். இதற்கு மேல் நான் எதைச் சொல்வது?

[பேட்டி முடிவுறும்தறுவாயில் "ஸ்ரீலஸ்ரீ அடிகளாரை மிகவும் விசாரித்ததாகச் சொல்லுங்கள்; வயது தள்ளாமை காரணமாக அவரை வந்து பார்க்க முடியவில்லை" என்று உணர்ச்சி ததும்பக் கூறினார்.

கொள்கைப் பிடிப்பும், தன்னம்பிக்கையும் கொண்ட அறிஞர் சர்மா அவர்களிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு திரும்புகிறோம். அவர் வாழ்ந்து கொண்டிருப்பது சிறு குடில் தான். ஆனால், அங்கே பரந்த-விரிந்த உள்ளத்தைக் காண்கிறோம்.

[தொகுப்பு: சீனி-விசுவநாதன்]

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

எங்குற்றம் காணேன் பிறர்குற்றம் காணும் இழிநிலையேன்
வங்குற்ற நாய்போற் குரைத்தேன் அழகு மலர்க்கரத்தில்
சங்குற்ற மால்மரு காகுகா சண்டாளர் செங்குருதி
கங்குற்ற வேலவா நன்னெறி காட்டு கதியிலையே. (77)

படிக்கின்றி லேன்நின் திருப் புகழ்மாலை பதைத்து நெஞ்சம்
துடிக்கின்றி லேன்மெய் துவள்கின்றி லேன்நீர் துளிவிழியில்
வடிக்கின்றிலேன் இன்னும் வாழுகின் றேனே மறிகடலைக்
குடிக்கின்ற வாறுவேல் விட்டவா எப்படிக் கூடுவனே. (78)

சண்டாளப் பேய்க்குண மாம்பெருஞ் சூறை தனிற்கொடிபோல்
திண்டாடி எய்த்துக் களைத்துவிட் டேன்உருள் தேன்கடம்பு
வண்டாட வேயணிந் தண்டர்கள் போற்ற மயில்மலைமேல்
நின்ருடு கின்ற திருவடி யேதுணை நின்மலனே. (79)

ஒன்றிலேன் ஊரலை நாய்போல் திரிந்தேன் ஒருமையிலேன்
பன்றிபோற் சாக்கடைப்பட்டேன் புவியிற் பழிசுமந்தேன்
கொன்றிலேன் ஆணவம் வென்றிலேன் ஐம்புலன் குன்றைமலை
வென்றிவேல் கைக்கொண்டு நின்றவா எப்படி மீளுவனே. (80)

செந்தா மரைபுரை சேவடி போற்ருச் சிறுமையினேன்
நொந்தேன் அழுதேன் நுவலற் கரியாய் நுடங்கிமனம்
வெந்தேன் சரவண குன்றக் குடிமலை வீற்றிருக்கும்
எந்தாய் அருளைப் பொழிவதென் ருேஇவ் வெளியனுக்கே. (81)

இளைத்தேன் வயிற்றுக் கிரைதேடி அந்தோ இனியபலா
சுளைதேன் என நீ யிருக்க அலைந்து சுழன்று விட்டேன்
முளைத்தேன் வயல்நடு வேகள்ளி போல் இன்று மூங்கைக்குவாய்
அளித்தாய்எம் ஆறு முகத்தர சேஎனை ஆட்கொள்கவே. (82)

இந்தப் பிறப்பினில் யான்செய்த பாவத் திருள்வினையும்
முந்தைப் பிறப்பின் வினையும் திரண்டிங்ஙன் மொய்த்திருண்டு
பந்தித்த தாற்பட்ட பாடெலாம் போதும் பகையசுரர்
சிந்தித் தெறித்தோடச் செங்கரம் கொட்டிய சேவகனே. (83)

உன்னையே நம்பும் உறுதியில் லேன்என் புருககில்லேன்
என்னையே நம்பினேன் யானென தென்னும் இயல்புடையேன்
அன்னைக் கருணை யுடையாய் ஆறுமுக அப்பனேஇப்
புன்னெறி யேனையும் ஆட்கொள வா, இப் பொழுதினிலே. (84)